# உலகின் ஆன்மீக அறநெறி மறுமலர்ச்சி





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# உலகின் ஆன்மீக அறநெறி மறுமலர்ச்சி

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

பேராசிரியர் திரு. L. ஜானகிராமன், M. A.,







**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா

விலை] 1988 [ரூ.

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக் கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டு ஞானயக்ஞத் தொடரில் 'உலகின் ஆன்மீக அறநெறி மறுமலர்ச்சி' என்ற நூலை பேராசிரியர் திரு. L. ஜானகிராமன், M. A. அவர்கள் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

அத்தியாயம் நான்கு
ஒழுக்க நெறிகள்



அத்தியாயம் ஐந்து
சாதுக்கள், சந்நியாசிகள்

# உலகின் ஆன்மீக அறநெறி மறுமலர்ச்சி

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

---

| பெயரும் விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|
| Sri. K. Ananthaswamy, Bangalore-3 | ... | 101 |
| திரு. அ. ப. வைத்திலிங்கம், குறிஞ்சிப்பாடி | ... | 100 |
| திரு. V. இராமசந்திர ரெட்டியார், சாத்தனூர் | ... | 100 |
| திரு. M. தனபால், B. E., ஈரோடு-5 | ... | 100 |
| திரு. K. A. சஞ்சீவிசெட்டியார் தர்மஸ்தாபனம், சேலம் | ... | 100 |
| திரு. A. C. K. இராமசாமி செட்டியார், பெங்களூர்-53 | ... | 100 |
| M/s. வேலுசாமி & சன்ஸ், பெங்களூர்-2 | ... | 100 |
| The Sobana Trading & Co., Bangalore | ... | 100 |
| M/s. Sumathi Metal Store ,, | ... | 100 |
| M/s. Pari Steel Industries, ,, | ... | 100 |
| Sri. R. Balakrishna Setty, ,, | ... | 100 |
| திருமதி. பங்காரு சாம்பசிவம், ஆத்தூர் (சேலம் Dt) | ... | 100 |
| திரு. K. பாலகிருஷ்ணன், M. A., B. T., கரூர் | ... | 100 |
| திரு. P. மாணிக்கம், மேச்சேரி | ... | 100 |
| திரு. K. S. வேலாயுதம், சேலம்-10 | ... | 100 |
| வளவாரி திரு. S. மல்லிசெட்டியார், சேலம்-6 | ... | 100 |
| திரு. C. A. சுப்பரமணியம் & திருமதி. சரஸ்வதி, சேலம்-6 | ... | 100 |
| திருமதி. K. C. பத்மாவதி அம்மாள், சேலம்-4 | ... | 100 |
| திரு. R. சிவராமன், சேலம்-6 | ... | 100 |
| டாக்டர் K. சீதாராமன், R. I. M. P. சேலம்-6 | ... | 100 |

| | | |
|---|---|---|
| திரு. C. L. பாலசுப்பரமணியம், கோவை-18 | ... | 125 |
| திரு. K. சுந்தரம், B. E., கோவை-41 | ... | 100 |
| திரு. நா. குணசீலன், திருக்கருகாவூர் | ... | 100 |
| Sri. N. S. Rao, Madras-90 | ... | 108 |
| திருமதி. சுந்தரி ஸ்ரீனிவாசன், கோவை-2 | ... | 100 |
| திரு. S. A. பரமசிவம், இளம்பிள்ளை | ... | 100 |
| திரு. P. சுந்தரராஜன், சேலம்-6 | ... | 100 |
| திருமதி. R. பிரியாரவி, சேலம்-6 | ... | 100 |
| Divine Life Society Branch, Andamans | ... | 101 |
| திரு. க. லக்ஷ்மி நாராயண ரெட்டியார், ஆவணிப்பூர் | ... | 100 |
| திரு. S. சங்கரநாராயணன், பம்பாய் | ... | 100 |
| திரு. K. S. கோதண்டராமன், சேலம்-2 | ... | 100 |
| திரு. V. சாரங்கபாணி, சேலம்-2 | ... | 100 |
| ஸ்ரீ சிவானந்தா ஸ்டோர், கொமாரபாளையம் | ... | 101 |
| திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A., B. L., நாமக்கல் | ... | 100 |
| Dr. N. பழனியப்பன், M. S., நாமக்கல் | ... | 100 |
| ஸ்ரீ காமாட்சி ரைஸ்மில் ,, | ... | 100 |
| திரு. R. சுந்தரராஜ ரெட்டியார், 'NBS' ,, | ... | 100 |
| திரு. P. A. அங்கமுத்து செட்டியார், ,, | ... | 100 |
| Dr. A. நடராஜன், M. B., B. S., ,, | ... | 100 |
| Sri. Ashok Goyal, ,, | ... | 100 |
| திரு. D. சந்திரசேகரன், ,, | ... | 100 |
| திரு. K. சந்திரன், திலக் ஆப்ஸெட் பிரஸ், சென்னை-21 | ... | 100 |
| திருமதி. G. சுகந்தினி, பொன்னேரி | ... | 101 |
| திரு. P. மாணிக்கவாசகம், பள்ளபாளையம் | ... | 100 |
| Dr. C. R. ரத்தினசபாபதி, M. B., B. S. கோவை-1 | ... | 100 |
| திரு. முருகேச கவுண்டர், சுக்கம்பட்டி | ... | 100 |

| | | |
|---|---|---|
| திரு. G. R. இராமலிங்கம், பெங்களூர்-10 | ... | 101 |
| திரு. G. நடராஜன், சென்னை-21 | ... | 110 |
| திரு. G. C. துரைசாமி, பெரம்பலூர் | ... | 100 |
| திரு. G. பரமசிவம், M. A., B. T. குருசாமிபாளையம் | ... | 101 |
| அருட்ஜோதி P. ஆறுமுகம், கோவை-18 | ... | 101 |
| திரு. நா. பூமலை, பரவளூர் | ... | 100 |
| திருமதி. A. ராமலெக்ஷ்மி அம்மாள், அம்பாசமுத்திரம் | ... | 101 |
| திருமதி B. சரோஜினி, சென்னை | ... | 100 |
| திரு. S. நடராஜன், ஆத்தூர் | ... | 100 |
| திரு. K. V. ராதாகிருஷ்ண செட்டியார், சேலம்-1 | ... | 200 |
| ஸ்ரீ சுவாமி சிவமயானந்தா, ரிஷிகேஷ் | ... | 100 |
| திரு. வை. வேலவன், பட்டணம் | ... | 100 |
| திருமதி. லலிதா சந்திரசேகரன், B. Sc., B. T., சேலம் | ... | 100 |
| திரு. M. தங்கமணி, M. Sc., திண்டுக்கல் | ... | 200 |
| திரு. K. ஆறுமுகம், பத்தமடை | ... | 108 |
| திரு. R. கிருஷ்ணராஜன், சேலம்-1 | ... | 100 |
| திரு. E. K. போஜன், இளித்துரை, நீலகிரி | ... | 100 |
| திரு. R. P. ஏகாம்பரம், கொமாரபாளையம் | ... | 100 |
| திரு. M. M. சுப்பரமணியம், தூத்துக்குடி-3 | ... | 108 |
| Sri. R. V. நாராயணன், B. E., சென்னை-18 | ... | 100 |
| திரு. M. அண்ணாமலை செட்டியார், காரைக்குடி-1 | ... | 100 |
| திரு. P. சந்திரசேகரன், B. E., இராசிபுரம் | ... | 100 |
| திரு. S. குமார், D. M. E. திருபத்தூர் | ... | 100 |
| திரு. V. காளீஸ்வரன், M. A., மோர்பாளையம் | ... | 100 |
| திரு. நா. அழகப்பத் தமிழன், அரியக்குடி | ... | 100 |

# உலகின் ஆன்மீக அறநெறி மறுமலர்ச்சி

## அத்தியாயம் — ஒன்று

## பெரும் ஒழுக்கத் தவறுகள்

### 1. ஆன்மீக மறுமலர்ச்சியின் அவசியம்

எல்லா நாட்டையும் சேர்ந்த, நல் இதயம் படைத்த பெரியோர்கள், சிறந்த அறிவாளிகள், தத்துவ ஞானிகள், தீர்க்கதரிசிகள், புனித ஆன்மாக்கள் இவர்கள் அனைவரும் காலமெல்லாம் செய்த தங்கள் போதனைகளின் மையக்கருத்தாக நாம் ஆண்டவனின் குழந்தைகள் என்பதையும், மனித சகோதரத்துவத்தையும், நல்லெண்ணம் சமாதானம் இவைகளின் ஆனந்தத்தையும், தன்னலமற்ற அன்பின் உயர்வையும், அமைத்தனர். எனவே எல்லாவற்றிற்கும் மேலாக நாம், அன்பு தன்னலமற்ற தன்மை இவற்றின் பெருமையை ஒவ்வொரு இல்லத்திற்கும் கொண்டு செல்லவும், ஒவ்வொரு இதயத்திலும் பதியவைக்கவும் வேண்டும்.

அணு ஆயுதக் குவிப்பு, இனவெறி வெறுப்புக்கள், தேசங்களின் பேராசைக் கொள்கைகள், திட்டமிட்ட சுரண்டல், உலகளாவிய குறுகிய நோக்கு, சகிப்புத்தன்மை இன்மை, நம்பிக்கையின்மை, இவைகள் பரவியிருக்கும் இந்தக் காலத்தில், உலகிலுள்ள பல்வேறு நாடுகளில் உள்ள அரசாங்கங்களின் திட்டங்கள், கொள்கைகள், வழிமுறைகள் இவற்றை மாற்றுவதோடு மட்டும்

நமது பணி முடிவடைவதில்லை. உலகளாவிய, ஆன்மீக கல்வியை மக்களிடையே பரப்பவும், மனிதனுடைய இயல்புகளையும், தனிப்பட்ட வாசனைகளையும் புனிதப்படுத்தி மாற்றியமைக்கவும் நாம் செயல்பட வேண்டும். தனி நபரின் அறநெறி, ஒழுக்கநெறி, பண்பாடு இவற்றைச் செம்மைப் படுத்த உலகம் தழுவிய அளவில் பணி செய்யப்பட வேண்டியது, தலையாய முக்கியத்துவமுடைய, அவசரமான, தவிர்க்க முடியாத தேவை என்பதை முதற்கண் உணரவேண்டும். ஏனென்றால், ஜாதி, வகுப்பு, தேசம், மனித சமுதாயம்போன்ற உலகெங்கும் பரந்துள்ள அமைப்புகளுக்கெல்லாம் அடிப்படை அச்சாணி, தனிமனிதனே.

துரதிருஷ்டவசமாக, பெரும்பாலான மக்களின் சிந்தனையும், உணர்வுகளும் இன்பத்தையே நாடிச் செல்கின்றன. அவர்கள் விலங்குகளைப்போன்று, பண்பற்றும், பேராசையுடனும் செயல் படுகிறார் கள். அவர்களை நன்னெறிக்குத் திசை திருப்ப வேண்டும். தெய்வீகத் தன்மை ஒவ்வொரு வருடைய உணர்விலும் ஒன்றியுள்ளதால் இந்தப்பணி முடியாதது ஒன்றல்ல. இந்த இறைத் தன்மையை வெளிக்கொணர்வதே, உண்மையான கல்வி. பல்வேறு தேசங்களில், வருங்காலத்தில் எல்லா நலன்களையும் செய்யக்கூடிய அரசை தேர்ந்தெடுக்கும் ஒரு புதிய தலைமுறையினரை ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்ற நம்பிக்கை நிறைவேற வேண்டுமென்றால் — படிப்படியாக, ஆனால் நிச்சயமாக, மக்களின் மனப்பாங்கை புதுப்பிக்கும் இந்தப் பணியை பொதுவாக சமுதாய மட்டத்திலும், ஸ்தாபன அளவிலும் குறிப்பாக கல்வித்துறையிலும், மற்றும் ஒவ்வொரு வீட்டிலும், முழுமூச்சுடன் தொடங்க வேண்டும்.

இது கடினமான வேலை என்று எனக்குத் தெரியும். ஆனால் பெரும் பணிகளெல்லாம், செப்பிடுவித்தைபோன்று ஒருபொழுதும் செய்யப் படுவதில்லை. எல்லா ஆக்கப் பணிகளுக்கும் கடின மான உழைப்பு தேவை. அதுவும் உலகளாவிய, ஆக்கபூர்வமான உயிரோட்டமுள்ள பணிக்கு அது மிகவும் தேவை. பலன் உடனே கிடைக்காது. அநேகமாக இப்படிப்பட்ட பணிகளின் பலன் வருங்காலத்திற்கே உரியது. செழிப்பான, நல்ல மகசூல் பெற விரும்பும் விவசாயி, பயிரை அழிவிலிருந்தும், பூச்சிகளிடமிருந்தும் காப்பாற்று வதில் கவனம் செலுத்தி, அடுத்த மகசூலுக்கான விதைகள் நன்றாக முளைத்திருக்கும் நாற்றாங்காலை பேணுவதிலும் அந்த நாற்று நடப்பட வேண்டிய நிலத்தைப் பண்படுத்துவதிலும் முனைவதுபோன்று, வருங்காலத்தில் சமாதானம் நிலைக்கவும், உலகம் எங்கும் நல்வாழ்வு நிலவவும் நாம் நான்கு சுதந்திரங்களும் கிடைக்கும் வகையில், சூழ்நிலையை உருவாக்க வேண்டும். உலகில் சமாதானம் நிலவவேண்டுமென்றால், போலித்தனம் குறைய வேண்டும், பொறாமை குறைய வேண்டும், அச்சம் அகலவேண்டும், காலத்திற்கு ஒவ்வாத சம்பிர தாயங்களுக்கு அடிமையாக இருப்பதும், உலகாயதக் கொள்கைகளை மட்டுமே கடைப் பிடிப்பதும் குறைய வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, ''தானும் வாழ்ந்து பிறரையும் வாழவிட வேண்டும்'' என்ற தர்மத்தையும், பிறருடைய உரிமைகள், தேவைகள் சுய மரியாதை இவற்றைத் தனதே போன்று கருதும் மனப்பாங்கையும் முதலில் பெறவேண்டும்.

அளப்பரிய அன்புடையவனாகத் தன்னை மனிதன் மாற்றிக்கொள்ள வேண்டும். தேசபக்தி, நாட்டுப் பற்று, இனப்பற்று, மதப்பற்று ஆகியவைகளை ஒற்று

மையின்மை, வேற்றுமை, பலாத்காரம், உயர்வு மனப்பான்மை இவைகளை ஊக்குவிக்கும் சக்தி களாக மாறும்படி விடக்கூடாது. உங்களுடைய தேசபக்தியும், தனிமனித சுதந்திரமும், மற்ற வனுடைய தேசபக்தியும், தனி மனித சுதந்திரமும் எவ்வளவு புனிதமானது என்பதை உங்களுக்கு அழுத்தமாக உணர்த்தவேண்டும். அன்பே உண்மையான மதம். உண்மையான மதம் அனை வரையும் ஒற்றுமைப் படுத்துகிறது. பெரியவர்கள் எல்லாவற்றிலும் நல்லதையே காணவேண்டும் என்கிறார்கள். ஆனால் நாம் அனைத்திலும் ஆண்ட வனைக் காண முயல வேண்டும். அப்பொழுது தான் நானிலம் எங்கும் நல்லதையே காணமுடியும். உண்மை, தூய்மை, அன்பு, திருப்தி, தன்னல மின்மை இவற்றை மனிதனுக்குப் போதியுங்கள்.

மக்களின் உள்ளத்தில், ஆண்டவனிடம் உயிர்த்துடிப்புள்ள நம்பிக்கை இருக்கட்டும். ஏனென்றால், அதுதான் உண்மையான மதத்தி னுடைய உயிர் நிலையின் அடிப்படை சாராம்சம். இந்த நம்பிக்கையில்தான் நமது வெற்றியின் எதிர் பார்ப்பே இருக்கிறது. இந்த குறிக்கோளை சாதித்துவிட்டால், நமது வேலை அநேகமாக முடிந்து விட்டது. தூண்டி விடப்பட்ட தெய்வீகச் சுடரை உள்ளத்தே உடைய மக்கள், தாமாகவே, தங்களுடைய முயற்சிகளையெல்லாம் மேற்கூறிய குறிக்கோள்களை அடையும் வகையில் செயல்படு வார்கள்.

யுத்த பயத்திலிருந்தும், அழிவிலிருந்தும், மத சகிப்புத்தன்மை இல்லாத வெறியிலிருந்தும், இனக்காழ்ப்பு, வெறுப்பு, அடிமைத்தனத்தால் நாகரிகத்தைப் பரப்புவதாகக் கூறும் ஏமாற்று

வித்தையிலிருந்தும், பிறருக்கு நன்மை செய்வதிலும், கொடையிலும் 'நான் செய்கிறேன்' என்ற அகம்பாவத்திலிருந்தும், தெய்வத்தன்மை அற்ற காரியங்களிலிருந்தும், உலகாயத வாதத்தின் அலங்கார அடுக்கு மொழிகளிலிருந்தும், உலகம் பாதிக்கப்படாதிருக்கட்டும். எல்லா உயிரினங்களுக்கும் சாந்தி கிட்டட்டும்.

## 2. ஒழுக்க நெறியின் முக்கியத்துவம்

இன்றைய இந்தியாவில் ஒழுக்க நெறி முக்கியமாக வலியுறுத்தப்பட வேண்டும். நன்னடத்தை, அறவாழ்க்கை, கடமையாற்றல் இவற்றைப்பற்றி பேசும் துறையே ஒழுக்க நெறியாகும். சதாசாரம் என்று சமஸ்கிருத மொழியில் சொல்லப்படுவது, நன்னடத்தை, ஒருவனின் நற்பாங்கு என்று பொருள்படும். பகுத்தறிவு படைத்த உயிர்கள் மற்ற உயிர்களிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைக் கூறுவது அறநெறி அல்லது ஒழுக்கநெறி எனப்படும்.

மற்றவருக்கு நன்மை பயக்காத செயலையோ, முயற்சியையோ ஒருவன் வெட்கப்படும்படியான செயலையோ ஒரு பொழுதும் செய்யலாகாது. மாறாக சமுதாயம் போற்றும் செயல்களைச் செய்ய வேண்டும். இதுதான் அறநெறி என்பதின் சுருக்கமாகும். உண்மை பேசுதல், அஹிம்சையைக் கடைப்பிடித்தல். சிந்தனை, சொல், செயல் இவற்றால் பிறரைப் புண்படுத்தாமல் இருத்தல், ஒருவரிடமும் சுடு சொல் சொல்லாமை, ஒருவரிடமும் கோபப்படாதிருத்தல், ஒருவரையும் அவதூறு செய்யாமை, ஒருவரைப் பற்றியும் புறம் கூறாமை, எல்லா உயிரிடத்தும் இறைவனைக் காணுதல் ஆகியவை சதாசாரம் எனப்படும்.

ஒருவனுடைய செயல் முறையினுல்தான் அவனுக்கு நீண்ட ஆயுளும், வளங்களும், செல்வங்களும் கிடைக்கின்றன. வாழ்க்கையின் குறிக்கோளை அடைய அது ஒரு மார்க்கமாகும். நன்னடத்தை இல்லாமல், இலக்கை அடைய ஒருவராலும், முடியாது. நன்னடத்தை ஒருவனுக்கு புகழ், நீண்ட ஆயுள், செல்வம், மகிழ்ச்சி இவற்றை அளிக்கிறது. அது காலப் போக்கில் மோக்ஷத்தையும் அளிக்கிறது. நன்னடத்தையினுல், புண்ணியம் வருகிறது. புண்ணியம் நீண்ட ஆயுளை அருள்கிறது. நன்னடத்தை புகழையும் நீண்ட ஆயுளையும், சொர்க்கத்தையும் கொடுக்கிறது. தேவர்களைத் திருப்திப்படுத்த மிகச் சிறந்த சாதனம் நன்னடத்தையே. எல்லாத் தரத்திலுள்ள மக்களிடமும், ஒருவன் கருணை காட்ட வேண்டும். புண்ணியம் நன்னடத்தையினுல் இனம் காட்டப்படுகிறது.

நன்னடத்தையைப் பின்பற்றுவதினுலேதான் ஒருவன் நல்லவனுகவும் புண்ணியவானுகவும் திகழ்கிறுன். நல்லவர்கள், புண்ணியவான்கள் இவர்களின் செயல்களினுல்தான் நன்னடத்தை நெறிகள் அமைக்கப்படுகின்றன. இம்மையிலும், மறுமையிலும் செய்யப்படும் பெரும் பணிகளைச் சார்ந்திருக்கும் புகழ், நன்னடத்தையினுலேயே பெறப்படுகிறது. உண்மையாகவே, நன்னடத்தையினுல்தான் ஒருவன் மூவுலகையும் வெல்ல முடியும். நற்பண்பாளன் சாதிக்க முடியாததே கிடையாது. நற்செயல், இனிமையான நல்ல சொற்கள் இவற்றை உடைய மனிதனுக்கு ஒப்புவமையே கிடையாது. ஒருவன் அறநெறியில் நின்று, நற்செயல்கள் புரிவானேயானுல், அவனை நேரில் கண்டிராமல், ஆனுல் அவனைப்பற்றிக்

கேள்விப்பட்டவர் கூட அவனை மதித்துப் போற்றுவர்.

நன்னடத்தை இல்லாத, துஷ்டர்களுக்கு நீண்ட ஆயுள் கிடைக்காது. அப்படிப்பட்ட துஷ்டரைக் கண்டு அனைத்து உயிர்களும் பயப்படுகின்றன. அவனால் ஒடுக்கப்படுகின்றன. எனவே ஒருவன் வளமோடு வாழ்ந்து முன்னேற விழைவானுகில் அவன் அறநெறியில் நல்வாழ்வு வாழ வேண்டும். ஒரு பாவியின்; துயரங்களையும், மலங்களையும், ஒழிப்பதில் நன்னடத்தை வெற்றி காணும். அறவாழ்வு வாழ்பவனுக்கு, கொள்கை, கோட்பாடு, குறிக்கோள் இவை உண்டு. அவன் இவைகளை நேர்மையாகக் கடைப்பிடித்து, அவனுடைய பலவீனங்கள் குறைபாடுகள் இவற்றை நீக்கி நன்னடத்தையினுல் சாத்வீக மனிதனுகிருன். பெரியவர்கள், பெற்ருேர்கள், ஆசிரியர்கள், ஆச்சாரியர்கள். சகோதரிகள், சகோதரர்கள், நண்பர்கள், உறவினர்கள், அயலார்கள், மற்றும் எல்லா உயிரினங்கள் இவைகளிடம் மிக ஜாக்கிரதையாகப் பழகுவான். சாதுக்களையும் மகாத்மாக்களையும் அணுகியும், மிகக் கவனமாக அறநூல்களைக் கற்றும், நல்லது, கெட்டதை அறிந்துகொள்ள அவன் முயற்சி செய்கிருன். பிறகு தர்ம நெறியாகிய ராஜபாதையில் மகிழ்ச்சி நடைபோடுகிருன்.

நன்னடத்தையுடையவன், எல்லா உயிரினங்களின் நன்மையைக் கருத்தில் கொள்கிருன். அண்டை அயலாருடனும், மற்றெல்லோருடனும் இசைபட வாழ்கிருன். அவன் யாருடைய மனத்தையும் புண்படுத்துவதில்லை. பொய் பேசுவதில்லை, பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கிருன். மனத்தின் தவருன போக்கை அகற்றி, நன்னடத்தை

பயில்வதன் மூலம், பரப்பிரம்மத்துடன் ஒன்றி யிருக்கும் பேரானந்தப் பெருநிலையை அடைய முயற்சி செய்கிறன்.

''நீ பெற விரும்புவதைப் பிறருக்குக் கொடு. பிறர் உனக்கு என்ன செய்ய வேண்டுமென்று விரும்புகிறயோ அதை நீ அவர்களுக்குச் செய்'' இதுதான் தர்மத்தின் முழுப் பொருள். இதைக் கவனமாகக் கொள். இதை உன் அன்றுட வாழ்க் கையில் கடைப்பிடி. நீ எல்லாத் துன்பங்களிட மிருந்தும் ரக்ஷிக்கப்படுவாய்.

தர்மம், சத்தியம், நற்செயல்கள், அதிகாரம், வளம் எல்லாம் நன்னடத்தையின் மூலம் பெறப் படுகின்றன. தர்மம் மிகச் சூட்சுமமானது, சிக்கலானது, தெளிவற்றது. முனிவர்களே குழப்பமடைந்து விடுகிறர்கள். செல்வம், திருப்தி, வீடுபேறு இவற்றை தர்மம் முடிவில் தருகிறது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களில் தலையாயது தர்மம். கடமை, அறநெறி என்று தர்மம் பொதுவாக கூறப் படுகிறது. ஸ்ரேயஸை (மோக்ஷத்தை) கொடுக்கக் கூடிய எந்த பணியும் தர்மமே. பிறருக்கு தீங்கு இழைக்கும் குறிக்கோள் இல்லாத பணி நிச்சயம் தர்மமே. ஏனென்றல் உண்மையிலேயே எல்லா உயிர்களையும் எல்லாத் துன்பங்களி லிருந்து விடுவிப்பதற்காகவேதான் அறநெறிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. எல்லோரையும் காப்பதால்தான் அது தர்மம் எனப்படுகிறது. மெய்யாகவே ஒழுக்கம் எல்லா உயிரினங்களையும் காப்பாற்றுகிறது. ஆன்மீக ஒருமைப்பாடு அல்லது உயிரினங்களின் ஒற்றுமை அல்லது எங்கும் எதிலும் ஒருமைப்பாட்டைக் காணும் அத்வைத சித்தாந் தம், சதாசாரத்தின் அடிப்படையாக அமைகிறது.

''எல்லாம் பிரம்ம மயம். வேற்றுமை என்று ஒன்றில்லை'' என்ற வேதாந்த ஞானத்தைப் பெற அறநெறி (சதாசாரம்) உங்களைத் தயார் செய்கிறது.

## 3. ஆகாரத்தைப் பற்றிய ஆதார உண்மைகள்

நாம் மிகவும் நாகரீகமானவர்கள் என்று பெருமைப்பட்டுக் கொண்டாலும் கூட ஆகாரத்தைப் பொறுத்த வரை, நம்மை அறியாமலேயே பல பெரும் தவறுகளைச் செய்கிறோம்.

காலை உணவு என்று தொடங்கி ஆங்கில முறைப்படி உணவு சாப்பிடுவது நம் தேசம் போன்ற வெப்பமான தேசத்திற்கு பெரும்பாலும் ஒத்து வருவதில்லை.

அதிகமாக வேக வைத்த உணவு வகைகள், வாசனைப் பொருட்கள், மசாலா கலந்த பதப் படுத்தப்பட்ட சத்து, அதிகமான உணவுகள் போன்ற இயற்கைக்குப் புறம்பான பதார்த்தங் களினால் நம் வயிற்றை நிரப்புவதினால்தான் இந்த இருபதாம் நூற்றாண்டு இளைஞர்கள் உடல் வலிமை இழந்து அல்லல் படுகிறார்கள்.

நமது நீண்ட நாள் பழக்கத்தை உடனடியாக மாற்ற முடியாது என்றாலும் நாம் ஒரு சமரச ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

முதலாவதாக நாம் காலையில் ஏதாவது உடற் பயிற்சி செய்ய வேண்டும். காலையில் சிறிது தூரம் நடக்கலாம் அல்லது வயிற்றைச் சீராக்கும் சில பயிற்சிகளைச் செய்யலாம் அல்லது பஸ்சிமோத்தா சனம், சர்வாங்காசனம் போன்ற இரண்டே இரண்டு ஆசனங்களாவது செய்ய வேண்டும்.

இரண்டாவதாக, நாம் விடியற்காலையில் குளிர்ந்த நீரிலோ, வெந்நீரிலோ குளிக்க வேண்டும்.

மூன்ருவதாக, நாம் காலை உணவு உட்கொள்ளக் கூடாது. அதற்கு பதிலாக குளித்த பிறகு ஒரு டம்ளர் பாலோ, எலுமிச்சை, ஆரஞ்சு, தக்காளி முதலிய பழச் சாறுகளில் ஒன்றை குளிர் நீரிலோ, வெந்நீரிலோ அருந்த வேண்டும். பாலுக்குப் பதிலாக மோர் உட்கொள்ளலாம். ஒன்றும் கிடைக்கவில்லை என்ருல் ஒரு குவளை குளிர்ந்த நீரோ, வெந்நீரோ அருந்திஞல் போதுமானது.

நான்காவதாக வழக்கமான மதிய உணவை விட்டுவிடக் கூடாது. ஆஞல் எண்ணெயில் வறுத்த அல்லது பொரித்த உணவுகள், தித்திப்புப் பண்டங்கள் இவற்றைக் கூடுமான வரை தவிர்க்க வேண்டும்.

ஐந்தாவதாக மாலையில் காபி அல்லது தேநீர் அருந்துவதற்குப் பதிலாக, அந்தப் பருவத்தில் கிடைக்கும் ஓரிரண்டு பழங்களை உட்கொள்ளலாம்.

ஆருவதாக நம் இரவு உணவில் பழங்கள், காய்கறிகள், பால் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

ஏழாவதாக இந்த உணவை இரவு 7 அல்லது 8 மணிக்குள் முடித்துக் கொள்ள வேண்டும்.

எட்டாவதாக இரவு பத்து மணிக்கு மேல் பதிஞெரு மணிக்குள் தூங்க வேண்டும்.

ஒன்பதாவதாக, வாரம் ஒரு முறை நாம், காய்கறி, பழம், பால் இவற்றையே இரண்டு வேளைகளும் உண்ண வேண்டும்.

பத்தாவதாக, நாம் ஒரு பொழுதும் தோல்வி மனப்பான்மையுடன் நமது சிந்தனையை சோர்வடைய விடக்கூடாது. ஆண்டவன் யாண்டும் நல்லதே செய்வார். நமது வாழ்க்கையில் நாம் வெளிப்படையாக எதிர் கொள்ளும் கஷ்டங்கள் நமது முன்னேற்றத்திற்காக ஏற்பட்டவையே. இந்தக் கஷ்டங்கள் நிவர்த்தியாவதற்கு வழி வகைகளை அருளுமாறு ஆண்டவனிடம் நாம் பிரார்த்திக்க வேண்டும். நாம் படுக்கப் போகும் முன் நம் இஷ்ட தெய்வத்தின் உருவத்தை மனத் தகத்தே இருத்தி, வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெற ஆரோக்கியம், செல்வம், சக்தி, இவற்றை அருளப் பிரார்த்திக்க வேண்டும். விருந்து சாப்பிடுவது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் விரதம் இருப்பதும். ஏனென்றால் தவிர்க்க முடியாமல் இயற்கை வாழ்க்கைக்கு மாருக நாம் செய்யும் தவற்றைத் திருத்த இது தேவை. நமக்கு மலச்சிக்கல் இருப்பதாக உணர்ந்தால், எப்பொழுதாவது, எனிமா எடுத்துக் கொள்ள வேண்டும், அல்லது விளக்கெண்ணெய் அல்லது தாவர மலமிளக்கிகளை உபயோகிக்கலாம்.

கடைசியாக வழக்கமான தானிய உணவை உட்கொள்வதற்குமுன் நாம் கீழ்க்கண்ட விதிகளைக் கூடுமானவரை பின்பற்ற வேண்டும்.

மாவுச்சத்து, கொழுப்பு, பச்சைக் காய்கறிகள், தித்திப்பு இவைகளை சேர்த்து உண்ண வேண்டும். ஏனெனில் அவை ஜீரண சக்திக்கு

உகந்த காரப் பொருள் (**alkaline**) அல்லது காரப் பொருள், அமிலப் பொருள் இரண்டும் இல்லாத ஒரு நடுநிலை சாதனத்தை உண்டாக்குகின்றன.

புரதம், கொழுப்பு, பச்சைக் காய்கறிகள் அமிலச் சத்துள்ள பழங்கள் இவற்றை ஒருங்கே உண்ணலாம்.

காலையில் பழங்கள் உண்பது தங்கமான வழி. மாலையில் பழங்களை உண்பது வெள்ளியான முறை. பழங்களை மட்டுமேகூட உண்ணலாம்.

நமது ஆகாரத்தின் சுவையைக் கூட்ட சிறிதளவு எலுமிச்சைச் சாற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். ஆகாரத்திற்குப் பின்போ அல்லது ஒன்று இரண்டு மணி நேரம் கழித்தோ மோர் குடிக்கலாம்.

இந்தக் கட்டுப்பாடுகள் எல்லாம் ஜீரண சக்திக் குறைபாடு உள்ளவர்களுக்குத்தான். அப்படிப் பட்டவர்கள்தான் ஏராளமானவர்கள் இருக்கிறார்களே! நல்ல திடமான ஆரோக்கியமுடைய ஒரு சிலரால்தான் எந்தவகை உணவையும் ஜீரணிக்க முடியும். அவர்களால்தான் உணவில் உள்ள ஒழுங்கீனங்களைக் கடுமையான உழைப்பினால் சமாளிக்க முடியும்.

ஒழுக்கக் கேடுகள், ஆன்மீக அஞ்ஞானம் இவை வேகமாக வளர்வதற்கு நல்ல நாற்றங்காலாக உடல்நலக் குறைவு, பலஹீனம், நரம்பு தளர்ச்சி முதலியன அமைகின்றன. அகத்தே அறநெறி ஆன்மீக பலம் பெருகுவதற்கு, நல்ல ஆரோக்கியமான நிலையில் உடலை வைத்திருப்பது சிறந்த முன்னேற்பாடாகும்.

## 4. குடியும் போதைப் பொருளும்

நல்லது கெட்டதை உணர்தல், பகுத்தறியும் தன்மை, அல்லதை ஒதுக்கி நல்லதைத் தீர்மான மாகத் தேர்ந்தெடுத்தல் இவை ஒழுக்க வாழ்க் கையில் நடைமுறைகளாக அமைகின்றன. இந்தக் குணங்களை உஷார் நிலையில் வைத்திருத்தலும் கெட்டுப் போகாமல் காப்பாற்றுவதும் ஒவ்வொரு தனிநபரின் தார்மீகக் கடமையாகும். இக் குணங்களை மழுங்கவைக்கும் அல்லது பலவீனப் படுத்தும் அல்லது அழிக்கும் பழக்க வழக்கங்கள் ஒழுக்கப் பண்பாட்டிற்கே ஊறு செய்வனவாகும். வெளிப்பார்வைக்கு இப்படிப்பட்ட பழக்கங்கள் மிகச் சிறியவைகளாகத் தெரிந்தாலும், காலப் போக்கில் அளவில்லாத் தீங்கை மனிதனுக்கு விளை விக்கும். இத்தகைய பழக்க வழக்கங்களில் உழல்பவன் ஒழுக்க விதிகளில் கடுமையான ஊடுறுவல்களைத் தொடர்ந்து செய்பவனாகிறான்.

இத்தகைய ஆன்மீக அழிவைத்தரும் பழக்கங் களில் தலையாயது குடிப்பழக்கம். இத்தீய பழக்கம் மனிதனுடைய தார்மீக இயல்புகளை அழிக்கிறது. அவனுடைய மகத்தான நோக்கங்களையும், எதிர் பார்ப்புகளையும் ஒழிக்கிறது. அவனுடைய உயர்ந்த சிறப்பியல்புகளை எல்லாம் நாசமாக்கு கிறது. குடிகாரனுடைய இயல்பு மென்மையற்ற தாகி அவன் அழிவின் பாதாளத்திற்கே மூழ்கி விடுகிறான். ஒரு விரும்பத்தக்க சமுதாய சாதனை யாகக் கருதப்படும் அளவுக்கு குடிப்பழக்கம் பரவ லாக உள்ளது. விஸ்கி, பிராந்தி, ஷாம்பெய்ன் போன்ற பலவகை மது பானங்கள், நீர், பால் போன்ற சாதாரணமான பானங்களாகக் கருதப் படுகின்றன. எல்லா சமுதாய விழாக்களிலும், விருந்துகளிலும், இவை இயல்பான சம்பிரதாயங்

களில் ஒன்ருக ஒப்புக் கொள்ளப்படும் நிலையை அடைந்துள்ளது. இந்தக் கொடிய பழக்கத்தை மகளிரும் மேற்கொள்ள ஆரம்பித்துவிட்டனர். சில ''நவ நாகரீகக்'' குடும்பங்களில், தகப்பன், மகன், தாய், மகள் அனைவரும் ஒரே மேஜையில் அமர்ந்து மது அருந்துகிருர்கள். மெதுவாக இந்த பழக்கம் வளர்ந்து அவர்களை நிலையான குடிகாரர்களாக மாற்றுகிறது. குடி போதையில் ஆயிரக்கணக்கான குற்றங்களும், கொலைகளும் நடைபெறுகின்றன. குடிப்பழக்கம் இருக்கும் இடத்தில் குற்றங்கள் பரவலாக இருக்கும். மனித சமுதாயத்தின் அற நெறி வாழ்விற்கு அது பெரும் விரோதி. நாட்டி லிருந்து இந்தத் தீமையை ஒழிக்க வேண்டியது, சமுதாயத் தலைவர்கள், மதத் தலைவர்கள், அரசாங்கம் இவைகளின் மிக இன்றியமையாத கடமையும் பொறுப்புமாகும்.

குடிப்பழக்கம் போன்று பரவலான மற்ருெரு தீமை, கஞ்சா, அபின், சரஸ் முதலிய போதைப் பொருள்களை உட்கொள்ளும் வழக்கமாகும். அங்கீ கரிக்கப்பட்ட கடைகளில், கள் விற்கப்படுவது போன்று இந்தப் போதைப் பொருள்களும், வாடிக்கையாளர்களுக்கு விற்கப்படுகின்றன. வட இந்தியாவில் இந்தத் தீமை பரவலாக உள்ளது. இது எல்லா உந்துதல்களையும், அழித்துவிடுகின்றது. இந்தப் போதைப் பொருள்கள் மெதுவாக உண்டாக்கும் நச்சுத் தன்மையினுல் மென்மையான உணர்வுகள், உணர்ச்சிகள், அழிகின்றன. இவை மூளையை மழுக்கிச் சிந்தனைத் தெளிவையும், முடிவெடுக்கும் திறனையும் பாதித்து மனிதனை தெளி வற்ற ஆசாபாசங்களுக்கும் மனப்பிராந்திகளுக்கும் ஆளாக்குகின்றன. குடிகாரன், நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டு வாழ்க்கையின் உண்மை நிலையை சந்திக்க முடியாமல் கற்பனை உலகில் மூழ்குகிருன்.

மது வகைகள் அசாதாரண வெறியையும் குதர்க்கத்தையும் ஏற்படுத்தி, ஒழுக்கக் கேட்டிற்கு வழி செய்கின்றன. நல்ல குடும்பக் கலாச்சாரத்தை உடையவன்கூட குடிப்பழக்கம் ஏற்பட்டால் தனது சிறந்த திறமைகளேயும், தகுதிகளேயும், இழந்து மதிமயங்கியவளுகி, உபயோகமற்றவனுகிருன். அதிகமாகப் புகை குடிக்கும் பழக்கம்கூட ஓரளவிற்கு ஒழுக்க இயல்புகளேக் கொல்கிறது. ஆளுல் புகை குடிப்பதனுல் ஏற்படும் தீமைகள் உடனடியாக முழுமையாக உணரப்படமுடியாமல், மெதுவாக மறைமுகமாகச் சேர்ந்து கொண்டே போகின்றன. குடிக்க வேண்டும் என்ற அவாவிற்கு ஒருவன் ஆட்பட்டவுடன் மதுவை வழங்குபவனுடைய காலில் வீழ்ந்து கெஞ்சும் அளவிற்கு முற்றிலுமாகத் தான் வெட்கமற்றவனுகிருன். குடிகாரன், மது வகைகளே வாங்குவதற்காகத் தன் மனேவியின் நகைகளே விற்கும் அளவிற்குக்கூடச் செல்கிருன். அவன் எல்லா தன்மானத்தையுமே இழக்கிருன்.

இப்படிப்பட்ட கொடிய தீமைகள், இந்த புண்ணிய பரத கண்டத்தில் பீடுநடை பயிலும் பொழுது, ஒழுக்க முன்னேற்றம் எப்படி சாத்தியமாகும்? ஒழுக்கப் பண்பாடும், ஒழுக்கநெறி வாழ்க்கையும் எப்படித் தழைத்தோங்கும்? ஆழமாக வேரூன்றியுள்ள இந்தக் கொடிய தீமைகளே அறவே ஒழித்துக்கட்ட, ஒழுக்கச்சேனே ஒன்றை அமைப்பது ஒன்றே நம்பிக்கை தரும் வழியாகும். ஒழுக்கநெறி வாழ்க்கையை சீர்குலேக்கும் இந்தத் தீமைகளே எதிர்க்க, இளேஞர், முதியோர் அனேவரும் அணிதிரள்வோமாக!

## 5. சூதாட்டமும் சூதாடுபவனும்

நாகரீக சமுதாயத்தின் முதன்மையான சாபக்கேடு சூதாட்டம். யாருக்கும் எந்த லாபமும்

இல்லாமல் இருந்தும்கூட மக்கள் சூதாட்டத்தில் ஈடுபடுகிறார்கள். மாது, மது முதலியவற்றைவிட மிகவும் வெறியை உண்டாக்குவது சூதாட்டம். அப்பாவிகள், ஏமாளிகள், அறிவிலிகள், உணர்ச்சி வசப்படுபவர்கள் இவர்களைத் தன்னுடைய வலையில் சிக்கவைக்க மாயை உபயோகிக்கும் தூண்டில் சூதாட்டம்.

புஷ்கரன், நளராஜனை பகடை ஆட அழைத்தான். நளனும் ஒப்புக் கொண்டான். நளன் அனைத்தையும் இழந்தான். நளன் எவ்வளவு அதிகம் தோற்றானோ அத்தனை அதிகம் சூதாட்டத்தின்பால் ஈர்க்கப்பட்டான். உடுத்திய துணியுடன் ஓர் ஆடையாகத் தன் அரண்மனையை விட்டு வெளியேறினான். வெளியேறும் மன்னனின் பின்னால் கட்டிய சேலையுடன் சென்றாள் தமயந்தி, என்னே துன்பமயமான கோலம்! இவை அனைத்தும் சூதாட்டத்தின் விளைவே!

துரியோதனனுடன் சூதாடி, இராச்சியத்தையே இழந்தான் தர்மன். அவன் திரௌபதியுடன் கானகம் செல்ல வேண்டி வந்தது.

சூதாட்டம் எப்பொழுதுமே தவறான நம்பிக்கைகளைத் தூண்டும். சூதாடுபவனை அது பல வகைகளில் தூண்டிவிடும். சூதாட்டம் மாயையின் ஆயுதம். சூதாடுபவன் அடுத்த ஆட்டத்தில் தான் கட்டாயம் ஜெயிப்போம் என்று எப்பொழுதும் நம்புகிறான். ஆனால் அவன் தோற்றுக் கொண்டே இருக்கிறான்.

மனிதனின் குண நலத்தை சூதாட்டம் முழுமையாக கெடுக்கிறது. அது மனிதனை தர்மத்திற்குப் புறம்பானவனாகவும், தெய்வ பக்தி

இல்லாதவனுகவும் மாற்றுகிறது. அது மனிதனின் மனதை உணர்ச்சி வசப்பட வைத்து, நல்ல முடிவு எடுக்க முடியாதவனுகவும், இங்கிதம் இல்லாத வனுமாக மாற்றுகிறது. அவனை நாஸ்திகனுக மாற்றுகிறது. சூதாட்டம், சமுதாயத்திலுள்ள கெட்ட புத்தியுள்ளவர்கள் மற்றும் அயோக்கியர் களின் சகவாசத்தைப் பெற்றுத் தருகிறது. குடி, கூத்து, புலால் உண்ணல், இவை சூதாட்டத்தின் இணைபிரியா நண்பர்கள். கலிபுருஷன் குடியிருக்கும் முக்கியமான இடம் சூதாட்டக்களமே.

சூதாடிகள் எல்லோரும் முற்றிலும் அழிந்து போனவர்களே. அவர்கள் தெருவில் பிச்சை எடுப்பவர்களாக மாறுகிருர்கள். சூதாடுபவர்கள், புரிந்துகொள்ளும் புத்தியை இழந்து வருகிருர்கள். சூதாட்டம் மனிதனை ஏமாற்றுக்காரனுக மாற்று கிறது. சூதாட்டக்காரர்கள் நேர்மை அற்றவர் களாகவும், குறுகிய நோக்குடையவர்களாகவும், பொய் பித்தலாட்டம் நிறைந்தவர்களாகவும் மாறு கிருர்கள். தாங்கள் திருப்பிக் கொடுக்க முடியாது என்று தெரிந்த பிறகும் கடன் வாங்குகிருர்கள். ''பிச்சையெடு, இரவல் வாங்கு அல்லது திருடு''. இதுவே அவர்களுடைய கொள்கையும், கோட்பாடுமாகும். அவர்கள் வெறுக்கப்பட்டவர் கள் ஆகிருர்கள். எல்லா வகையான தீமைகளுக்கும் ஆளாகிருர்கள். அவர்கள் நிலை கேவலமாகவும், வருந்தத்தக்கதாகவும் இருக்கின்றது.

சூதாடும் இடத்திற்கு அருகேகூடப் போகாதீர் கள். ஒரு நொடிகூட சூதாடியுடன் சகவாசம் வைத்துக் கொள்ளாதீர்கள். அவனைப் பார்க்கக் கூடச் செய்யாதீர்கள். அவனிடம் பேசாதீர்கள்.

வடஇந்தியாவில் தீபாவளி சமயத்தில் பல நாட்களுக்கு இரவு, பகலாக மக்கள் சூதாடுகிறுர் கள். ஒரு ஏழைகூட, தீபாவளியின்போது சூதாடு வதற்காக இருநூறு ரூபாய் வரை சேமிக்கிறுன். இந்த நாட்களில் மக்கள் தாராளமாகச் சூதாட அனுமதிக்கப்படுகிறுர்கள். அரசு இத்தீமையை அனுமதிக்கிறது. சூதாட்டக் கூடத்தின் குத்தகை தாரர்கள், நிறைய பணம் சம்பாதிக்கிறுர்கள். இவற்றின் முதலாளிகளுக்கும் உரிய பங்கு கிடைக் கிறது. பள்ளிச் சிறுவர்களும், பெண்களும்கூட நன்ருக வேரூன்றிய சூதாட்டக்காரர்களாக மாறும் அளவிற்கு இந்தப் பழக்கம் மிகவும் பரவியுள்ளது. வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் சூதாட்டம் இருக்கிறது. தொழில் அதிபர்கள் கூடச் சூதாடு கிறுர்கள்.

சூதாட்டம் முழுமையாக நிறுத்தப்பட வேண்டும். சூதாடுபவர்களைக் கைது செய்து சிறையில் தள்ள வேண்டும். குத்தகைதாரர்களும், முதலாளிகளும் மிகக் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும். இவ்வுலகில் அவர்கள் தப்பிவிட்டாலும் கூட, எல்லாம் அறிந்த ஆண்டவன் அவர்களைத் தண்டிப்பான். இந்தத்தீமையை ஊக்குவிப்பவர்கள், இருட்டுக் குகையில் தள்ளப்படுவார்கள். குணப் படுத்த முடியாத தீராத நோயினுல் அவர்கள் அடுத்த ஜன்மத்தில் அல்லல்படுவார்கள். அவர்கள் பிச்சைக்காரர்களாகப் பிறப்பார்கள்.

குதிரைப்பந்தயம், சீட்டு விளையாட்டு மற்ற எல்லா வகைப் பந்தயங்கள், பூவா தலையா விளை யாட்டுக்கள் இவை அனைத்துமே ஒருவகை சூதாட்டம்தான். குதிரைப்பந்தய மைதானத் திலிருந்து திரும்பி வருபவர்கள் அனைவரும் மிகுந்த பணத்தை இழந்துவிட்டு இதயம் நொடிந்து, அழுது

கொண்டே வந்த பொழுதிலும், அவர்களால் பந்தயம் கட்டுவதை விட்டுவிட முடியாது. சூதாட்டத்தின் தூண்டுதல் மிக அதிசயமானது. எல்லாவற்றையும் இழந்து பாதிக்கப்பட்ட மனத்துடன் சூதாட்டத்திற்கு ஆளாகிய அப்பாவி மரணமடைகிறுன்.

## 6. விபசாரம்
## மாபெரும் சமூகத் தீமை

மனிதன் தெய்வத்தன்மை உடையவன். ஆனுல் இதைப்பற்றி எல்லாம் அஞ்ஞானத்தால் முற்றிலும் மறுந்துவிட்ட அவன் தரக்குறைவான சிற்றின்பச் சூழலில் உழல்கிறுன். அவித்தை அல்லது அஞ்ஞானம் எத்தனே அதிசயமானதாக இருக்கிறது. என்னே மோகம் அல்லது மயக்கத்தின் விந்தையான ஆற்றல்.

விபசாரம் ஒரு பெரிய சமூகத்தீமை. போதனேயாலும் சரியானபடி புரிந்து கொள்வதினுலும் அதை முழுமையாக ஒழிக்கவேண்டும். அது சமூகக்கட்டுக் கோப்பையே குலேத்து தேசத்தின் ஒருமைப்பாட்டை அழிக்கிறது. இரண்டு முக்கியமான பால்வினே நோய்களான **(Gonorrhoea and Syphilis)** இவற்றிற்கு காரணமான விபசாரம், ஆண், பெண் இருபாலரின் உடல் நிலேயைப் பாழ்படுத்தி அவர்களே வாழ்நாள் முழுவதும் நோய் வாய்ப்பட்ட நடைப்பிணங்களாக மாற்றுகிறது.

வெறுக்கத்தக்க ஒழுக்கமற்ற வாழ்க்கை வாழ்பவர்களுக்கு, ஆரோக்கியத்தின் சட்ட திட்டங்களே மீறுபவர்களுக்கு ஆண்டவன் அளித்த சாபம் நோய்களே.

மனைவியுடன் வாழும் சில மனிதர்கள்கூட ஒழுக்கங்கெட்ட வாழ்க்கை வாழ்கிறார்கள் என்றால் எத்தனை வெட்கக்கேடு. அக்னி சாட்சியாக அவர்கள் தங்கள் மனைவிக்கு உண்மையானவர்களாக இருப்போம் என்று சத்தியம் செய்திருக்கிறார்கள். இருந்தபொழுதிலும் அவர்கள் ஒழுக்கக் கேடான வாழ்க்கை வாழ்கிறார்கள். இந்த புத்தி கெட்ட ஏமாளிகளுக்கு, மரண தண்டனை கொடுத்தால் கூடத் தகும். காரண காரிய தெய்வீகத் திட்டம், கடினமானது, மாறாதது. அது குற்றவாளிகளை விடவே விடாது.

பால்வினை நோய்களால் பாதிக்கப்படுபவர்கள் வெளியே சொல்ல முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். காலாகாலத்தில் வைத்தியரிடம் கூற வெட்கப் பட்டுக் கொண்டு தங்கள் உடலில் வியாதி நன்றாக வேரூன்ற விட்டு விடுகின்றார்கள். இந்த நோய்க் கிருமிகள் இரத்தத்தில் கலந்து பலவித சிக்கல்களை ஏற்படுத்துகின்றன. அவர்களுடைய எலும்பும், மற்ற உள் உறுப்புகளும் பழுதடைகின்றன.

பிறகு பலவகை மருந்து ஊசிகளைப் போட்டுக் கொள்கின்றனர். இரத்தச் சோதனைக்காகப் பெரும் பணம் செலவழிக்கிறார்கள். எல்லா ஊசி மருந்து களும் பயனற்றுப் போகின்றன.

தன்னடக்கமில்லாததால், அவர்கள் தங்க ளுடைய அப்பாவி மனைவிக்கும் நோயைப் பரப்புகின்றனர். அவர்கள் மனைவியும், சொல் லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் மௌன மாகக் கஷ்டப்படுகின்றனர். அவர்களுக்குக் கருச் சிதைவும், குறைப் பிரசவமும் ஏற்படுகின்றன. அவர்களுடைய குழந்தைகளுக்கும் வம்ச வழியாக இந்த நோய் வருகிறது.

மூட மனிதனே! இப்பொழுதாவது உனது தவற்றை உணர்கிறாயா? இந்த நிமிடத்திலிருந்தாவது நல்ல புனிதமான வாழ்க்கை வாழ்வேன் என்று எனக்கு உறுதியளிக்கிறாயா? இளைஞனே! ஒழுக்கமற்ற வாழ்க்கையின் விபரீத விளைவுகளை இப்பொழுது புரிந்து கொள்கிறாயா? இப்பொழுதே தூய்மையான வாழ்க்கை வாழ்வேன், ஏகபத்தினி விரதம் இருப்பேன் என்று உளமாற உறுதியெடுத்துக்கொள்கிறாயா?

கல்லூரிக் காளைகளே! உங்கள் தகப்பனாரின் பணத்தை ஏன் நகரங்களிலும், ஹோட்டல்களிலும், சினிமாவிலும் வீணடிக்கிறீர்கள்? பால்வினை நோய்களுக்கு ஆளாகாதீர்கள்! ஜாக்கிரதை! உங்கள் வாழ்க்கை வீணாகிவிடும். சாதுக்கள், சந்நியாசிகள் இவர்களைப் போன்று தன்னடக்கத்துடன் வாழும் வழி வகைகளைக் கற்றுக் கொள்ளுங்கள். ஜபம், கீர்த்தனை, தியானம், புனிதமான மத நூல்கள் படித்தல் ஆகியவற்றை ஒழுங்காகச் செய்யுங்கள். நீங்கள் உலகின் வருங்கால சந்ததிகள்! இந்தியாவின் நம்பிக்கையும், புகழும் உங்களைப் பொறுத்திருக்கிறது. தூய்மையாக இருங்கள். ஒழுக்கமுடையவர்களாக இருங்கள். நல்லவர்களாக இருங்கள். தர்மவான்களாக இருங்கள். நீங்கள், தெய்வீகப் புகழின் சிகரத்தை முழுமையாகப் பெறுவீர்கள். கேவலமான சிற்றின்பத்தில் இந்த வாழ்க்கையைப் பாழாக்காதீர்கள். ஆன்மீக வானில் கொடி கட்டிப் பறப்பவர்களாக இருங்கள்.

மட்டமான இச்சைகளைத் தூண்டும் நாடி நரம்புகளை, தெய்வீக எண்ணத்தாலும், தெய்வீக சிந்தனையாலும் சமனப்படுத்துங்கள். உண்மையிலேயே உயர்ந்த மனிதனாகுங்கள். எல்லாப்

பெண்களையும் துர்க்கையாகக் காணுங்கள். உங்கள் பார்வையின் கோணத்தை மாற்றுங்கள். பீஷ்மர், லக்ஷ்மணன், அனுமன் இவர்களிடமிருந்து ஊக்கம் பெறுங்கள். உங்கள் வாழ்க்கை புகழுடையதாகவும், விழுமியதாகவும், பாராட்டத் தக்கதாகவும் அமையும்படியான செயல்களைச் செய்யுங்கள். ஒழுக்கம், தவம், தியானம், இவற்றின் மூலம் அழிவில்லாப் பெருமையைப் பெறுங்கள்.

விபசாரத்தில் ஈடுபடும் மனிதர்கள் மாக்களாகின்றனர். அவர்கள் அசுரவித்துக்களாகின்றனர். ஒழுக்க உணர்வுகளை இழந்து, வெட்கம் கெட்டவர்களாகின்றனர். அவர்கள் ஒரு குற்றத்துடன் நிற்பதில்லை. குடி, சூதாட்டம், திருட்டு ஏன் கொலை இவற்றில்கூட ஈடுபடுகிறார்கள். சமுதாயத்தில் அவர்களுக்கு உண்மையான கௌரவமுள்ள இடம் கிடையாது. எனவே, அழிவு — ஆதிக்கமுள்ள இத்தீமையின் அருகேகூடப் போகாதீர்கள். எப்பொழுதும் எச்சரிக்கையுடனிருந்து, இந்த பயங்கரத் தீமையிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

விபசாரம், ஒரு அனுமதிபெற்ற அங்கீகாரமுள்ள தொழிலாக ஊக்குவிக்கப்படுகின்றது. இந்தத் தீமையை ஒழித்துக்கட்ட முயற்சி செய்யாமல், அதை தவிர்க்க முடியாதது ஒன்று என்று ஒப்புக் கொள்ளும் அளவிற்கு அவர்கள் செல்கிறார்கள். மனித சமுதாயத்தின் ஒழுக்க வளர்ச்சி அவ்வளவு கடுமையாக இருக்கிறது. மனிதனின் வீரத்தையும், பலத்தையும் அதர்மம் அழிக்கிறது. இப்படிப்பட்ட ஆழமாக வேரூன்றிய தீமைகளை எதிர்த்துப் போரிட்டு வெல்வதற்கு வேண்டிய சக்தியை தர்மம்தான் அளிக்க முடியும்.

திருட்டுத்தனமான விபசாரம் மற்ருெரு தீமை. சில ஹோட்டல்களும், கடைகளும், உண்மையில் விபசாரக் கூடங்களாக இருக்கின்றன. விபசாரம் ரகசியமாக அங்கு நடக்கிறது. இவைகள் பெரும் பால் மையங்கள். சம்பாதிப்பதற்கு வேறு பண் புடைய வழிகளா இல்லே! இத்தகைய கேவலமான, கீழ்த்தரமான, கண்டிக்கத்தக்க வழியிலா பிழைப்பு நடத்த வேண்டும்! இதை உடனே நிறுத்துங்கள். உண்மையான மனிதன் ஆகுங்கள். ஆன்மாவை அழிப்பவர்கள் ஆகாதீர்கள். இந்த இகழத்தக்க வாழ்க்கை முறையைவிட்டுத் தள்ளுங்கள். நீங்கள் இப்பொழுது தவழும் பருவத்திலில்லே. நீ ஒரு மனிதன். இப்பொழுது நிமிர்ந்து நடக்கும் ஒரு மனிதன்.

வழி தவறிய பெண்களே! உங்கள் உடலே வியாபாரப் பொருளாக்காதீர்கள். சீதை, தமயந்தி, அனுசூயா, சாவித்திரி இவர்களின் அடிச் சுவட்டைப் பின்பற்றுங்கள். நீங்கள் அனேவரும் அன்னே துர்க்கையின் குழந்தைகள். நீங்கள் வழிப் படத்தக்க தெய்வீகத் தாய்மார்கள். உங்களுடைய உண்மையான அடிப்படை இயல்பை உணர்ந்து நல்வாழ்வு வாழ்ந்து, தெய்வீகத் தாய்மார் களாகத் திகழுங்கள்.

எல்லாவகை விபசாரத்திலிருந்தும் இவ்வுலகம் விடுதலே பெறட்டும். நீங்கள் அனேவரும் தூய்மை யான அறவாழ்க்கையை வாழ்வீர்களாக.

## 7. லஞ்சம் என்ற சாபக்கேடு

லஞ்சம் வாங்கும் பழக்கம் சர்வ சாதாரணமாகி விட்டது. அலுவலகத்தில் வேலை பார்க்கும் ஒருவரிடம் ''ஐயதேவ்! உங்கள் சம்பளம் எவ்வளவு?'' என்று வினவினுல் உடனே ''எனது சம்பளம் 50 ரூபாய் தான். ஆனுல் எனக்கு மாதம் 75 ரூபாய் வரும்படி வரும்'' என்ற பதில் வரும். இந்த ''வரும்படி'' லஞ்சமன்றி வேறில்லை. மக்கள் அறியாமையில் உழல்கிறுர்கள். படித்தவர்கள்கூட காரண காரிய விதியை அறியாமல் உளர். சம்ஸ்காரங்களேயும் அவைகளின் பலத்தையும் அறிந்திலர். நீங்கள் லஞ்சம் வாங்கினுல், அந்தத் தவற்றிற்குப் பலனை அனுபவிக்கவேண்டும். அது மட்டுமா? அடுத்த பிறவிக்கும் இத்தீமையின் கர்ம பலன் தொடரும். அப்பொழுதும் உங்களை லஞ்சம் வாங்க வைக்கும். அடுத்த பிறவியிலும் நீங்கள் நேர்மையற்றவராயிருப்பீர்கள். உங்களுடைய எண்ணங்களும், செயல்களும் உள்மனதில் பொறிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பிறவிக்கும் நீங்கள் நேர்மை இன்மையைக் கொண்டுசென்று, மிகவும் அல்லல்படுவீர்கள். உங்கள் தேவைகளைக் குறைத்துக்கொண்டு வருவாய்க்குள் வாழ வேண்டும். அப்பொழுது உங்கள் உள்ளம் நிர்மல மாயிருக்கும். நீங்கள் கவலைகள், கஷ்டங்கள் இல்லாமல் இருப்பீர்கள்.

உங்களுக்கு அமைதியான மரணம் கிடைக்கும். இப்பொழுதுதாவது காரணகாரிய விதியின் தீவிரம் உங்களுக்குப் புரியும் என நினைக்கிறேன். இந்த வரிகளைப்படிக்கும் இந்த நிமிடத்திலிருந்தாவது நீங்கள் உண்மையாயிருந்து நேர்மையான மனிதனுக மாறுங்கள். லஞ்சம் பெறத்தூண்டும் இலாகாக்களில் ஒரு பொழுதும் சேராதீர்கள். நீங்களும்

கெட்டுவிடுவீர்கள். கல்வித்துறை மிகநல்ல துறை. லஞ்சம் வாங்கவோ, பாவம் செய்யவோ இத்துறையில் வாய்ப்புக்கள் அரிது. நீங்கள் அமைதியான வாழ்க்கை வாழலாம். சாதனைகளைக் கடைப்பிடிக்கவும், தத்துவ, வேதாந்த நூல்களைக் கற்கவும் உங்களுக்கு அதிகமான விடுமுறை நாட்கள் கிடைக்கும். ஆன்மீகத் துறையில் நீங்கள் விரைவில் முன்னேறலாம்.

## 8. கருப்புச் சந்தையே!

உன் இருட்டுக் குகையில் தாமசம்
தாண்டவமாடுகிறது.
அவித்தை, அறியாமை, அவநம்பிக்கை
கொட்டமடிக்கின்றன.
உண்மையான மனைவியோ, கணவனோ
உண்டா உன்னகத்தில்,
தன்கீழ் வேலை பார்ப்பவனிடம்,
கைநீட்டி லஞ்சம் வாங்கும் மேலதிகாரியின்
உறைவிடம் நீ!
பேராசை, தன்னலம், ஞானசூன்யங்கள்
உலாவரும் பூங்கா நீ!
உன்னைக் கண்டால்,
ஒற்றுமை, பரந்த அன்பு, சத்தியம்,
மங்களம், சாந்தி இவை ஓடிடும் காத தூரம்.
கருப்புச் சந்தை வியாபாரியே!
உனக்கு தேஜஸ் ஏது?
உன் ஆன்மாவிற்கு உயிரேது?
கண்ணாடியில் பார்.
உன் அண்டங்கருப்பு முகத்தை
இப்பூவுலகிற்குப் பாரமாயிருக்கும் நீ
தீயவழியில் தேடிச் சேர்த்த சொத்து
அனைத்தும்
திடீரென மறைந்து விடும்!
ஏன் என்கிறாயா?

உன் சகோதரர்களின் குரல்வளையை
நீ முறிக்கவில்லையா !
மை வண்ண நரகம் உனக்காக
வாய்திறந்து காத்திருக்கிறது.
போ! நேராகப் போ! அதில் விழுந்து தொலை.
ஜகத்தீரே கேளுங்கள்
வேண்டாம், வேண்டவே வேண்டாம்
கருப்புச் சந்தை உங்களுக்கு,
உண்மையாயிருந்து உவப்பிலா ஆனந்தத்தைப்
பெறுங்கள்.
நித்தியானந்தத்தில் நிலைத்திருங்கள்.

## 9. கள்ளச் சாராய வியாபாரம்

தனித்தன்மை பெற்ற காலணி அணிந்து
நாகரீக நடைபயிலும் கனவானே !
உன் காலணியில் இருப்பது கஞ்சா — என்று
கண் துஞ்சா கலால் அதிகாரி கண்டு கொண்டு
ஏற்றிடுவார் உன்னைக் கூண்டுதனில்;
கொடுத்திடுவார் தண்டனையும்
உன் குழந்தையின் விளையாட்டுப் பொம்மையின்
உள்ளே வைரங்களைப் பதுக்கி,
கடத்திவரும் சீமாட்டியே! இதுவும் ஒரு
கள்ளக்கடத்தல் தானே !
கற்கும் நூலில், ஓட்டை செய்து
கஞ்சா திணித்து ஒட்டி,
பண்டிதர் போல் பாங்காக
புத்தகமும் கையுமாக உலவும்
'பெரியோரே', உங்கள் முகத்திரை கிழியும்!
நீங்களும் தண்டிக்கப்படுவீர்.
சுரங்கத்தில் வைத்தே வைரத்தையும்
தங்கத்தையும் விழுங்கும் மனிதர்களே.
எக்ஸ்ரேயை ஏமாற்ற முடியுமா ?
வயிற்றைக் கழுவி, வைரத்தையும்
தங்கத்தையும் எடுத்து விடுவர்.

மனிதா! ஏன் இப்படி உன்னையே
தாழ்த்திக் கொள்கிறாய்?
மூவுலகச் செல்வங்களுக்கும் உரியோனே!
இத்தீச் செயல்களை உதறித்தள்ளு!
தியானம் மூலம் தெய்வத்தை உணர்ந்து
அவனுடைய அளப்பரிய செல்வத்திற்கு
ஆளாகு!

## 10. வட்டி என்ற கொடுமை

கடும் வட்டி வாங்குவது மனிதத்தன்மை அற்றது. கடும் வட்டியை ஒழிக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. கடன் கொடுத்த பணத்திற்கு வட்டி வாங்குவதைக் குற்றமாக்க வேண்டும்.

மனித சமுதாயத்தில் உள்ள நலிந்த துரதிருஷ்டசாலிகளுக்கு, அவசரத்திற்கும், தேவைக்கும் உதவும் வகையில் பணம் கடன் கொடுக்கல் இருக்கலாம். ஆனால் வட்டி வாங்குவது, ஆயுள் கடுங்காவல் தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்பட வேண்டும்.

ஏழைகளின் இரத்தத்தை உறிஞ்சும், சோம்பேறிகளை சமூக பகிஷ்காரம் செய்ய வேண்டும். கடும் வட்டி வாங்குபவர்கள் தங்கள் தீச் செயலுக்கு அனுபவிப்பார்கள். கடும் வட்டி வாங்குதல் ஒரு தீங்கிழைக்கும் செய்கை. பாங்குக்ளில், போடப்பட்டிருக்கும் பணத்திற்கும், அவை கடன் கொடுக்கும் பணத்திற்கும் வட்டி வாங்குவது பாவம் என்பது நபிகள் நாயகத்தின் கொள்கை. நூற்றுக்கு நூறு வியாபார நோக்குள்ள இவ்வுலகில் கூட பாங்குகளிலிருந்து வட்டி வாங்காத உண்மை இஸ்லாமியர் உளர், அவர்களுடைய செய்கை தான் எத்தனை நேர்மையானது.

# 11. நேர்மையின்மை

நேர்மையின்மை ஒரு தீய குணம். அநேகமாக அனைவரிடமும் இத்தீய குணம் ஏதாவது ஒரு உருவத்தில் இருக்கிறது. நேர்மையானவர்கள் மிக அரிது. நேர்மையின்மை பேராசையின் கைப் பாவை. எங்கெல்லாம் நேர்மையின்மை உளதோ அங்கெல்லாம், இரட்டை வேடம், சந்தர்ப்பவாதம், ஏமாற்றுதல், மோசடி, பித்தலாட்டம் முதலியன இருக்கும். இவை நேர்மையின்மையின் பட்டாளம்.

மோகத்தின் முதல் அதிகாரி பேராசை. கீழ்த் தரமான இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள, நேர்மையற்ற வழிகள் நாடப்படுகின்றன. மோகம், ஆசை இவை ஒழிக்கப்பட்டால் மனிதன் நேர்மை யுள்ளவனாகிறான்.

நேர்மையற்றவன் எந்தத் தொழிலிலும் வெற்றி அடையமாட்டான். இந்த நேர்மை அற்ற தன்மை, ஒரு நாள் வெளிப்பட்டுவிடும். சமுதாயத்திலுள்ள அனைத்து மக்களும் அவனை வெறுப்பர். அவனுடைய முயற்சிகள் அத்தனை யிலும் அவன் தோல்வி அடைவான். லஞ்சம் வாங்கவோ, பொய் சொல்லவோ, நேர்மை யற்றவன் தயங்கமாட்டான். ஒரு பொய்யை மறைக்கப் பத்து பொய்களைக் கூறுவான், பத்து பொய்களை மறைக்க ஐம்பது பொய் சொல்வான். உண்மையைக்கூட அவனால் அழுத்தமாகப் பேச முடியாது. அவனுடைய உள்ளம் உளுத்துப் போயிருக்கும். நேர்மையின்மையை ஒழித்து நேர்மையை வளர்க்க வேண்டும். உங்களுக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடையுங்கள். மேலும் மேலும் வேண்டுமென்று ஆசைப் படாதீர்கள். எளிமையான வாழ்க்கை வாழுங்கள்.

உங்கள் எண்ணங்கள் உயர்ந்தவையாக இருக்கட்டும். ஆண்டவனிடம் பயபக்தியுடையவர்களாக இருங்கள். எல்லோரையும் நேசியுங்கள். அனைவரிடமும் உங்களைக் காணுங்கள். அப்பொழுது மற்றவர்களுடன் உங்களுடைய நடவடிக்கைகள் நேர்மையாக இருக்கும். உங்களிடம் உள்ள மிகக் குறைந்த உடமைகளைக் கூட, தியாகம் செய்யத் தயாராயிருப்பீர்கள். உங்களுக்குப் பரந்த இதயமும், தாராள மனப்பான்மையும் ஏற்படும். ஆண்டவனை உணர்வதற்கும், வாழ்க்கையில் வெற்றி பெறவும், உங்களுக்குத் தேவையானது இதுவே.

## 12. லஞ்சத்தின் பல அவதாரங்கள்

லஞ்சமே !
கிறிஸ்துமஸ் பரிசாக
அரிசியாக, பருப்பாக, துணிமணிகளாக,
மாம்பழமாக, 5%, 10% கமிஷனாக,
சுத்த வாரமாக (50—50)
இல்லத்தரசிக்கு காசோலையாக,
புழக்கடை வழியாக தங்கமாக,
பைகளில் வைக்கப்பட்ட பெரிய
பொட்டலமாக,
மோட்டார் காராக.
எத்தனை அவதாரங்கள் எடுக்கிறாய் !
புத்திசாலிகளின், புத்திசாலித்தனமான
பித்தலாட்டங்கள்
நாகரிகம் முதிர முதிர தந்திரமும் கூடுகிறது.
புத்திசாலித்தனம் அதிகம் என்றால்
லஞ்சம் கொடுக்கும் வழியும் அதிகம் மெருகு
ஏற்றப்பட்டதாக அமைகிறது.
கைமேல் லஞ்சம் உடனே கைகூடும் காரியம் !
கையெழுத்தும், அனுமதியும் அந்தக் கணமே
கிடைக்கும்

இவர்கள் அனைவரும் கொலைகாரர்கள் !
ஆம் ! அவர்களின் மனசாட்சியையும்
ஆன்மாவையும் படு கொலை செய்தவர்கள்
இந்தப் பாவத்தின் பலன் பல பிறவிகளில்
தொடரும்
அவர்கள் செய்வதை அவர்கள் அறியார்கள் !
எவ்வளவு பெரிய ஏமாளிகள் !
கொடிய நரகத்திற்குப் போக
நேரடியாக பாஸ்போர்ட் அவர்களுக்குக்
கிடைக்கிறது.
லஞ்சத்தினுல் பெருஞ்செல்வம் ஈட்டியுள்ளனர்.
ஆனுல், அந்தோ ! அச்செல்வம் !
வைத்தியருக்குப் போகும்,
திருடர்களுக்குப் போகும்.
கொள்ளையர்களுக்குப் போகும்
விரயமாகப் போகும்.
லஞ்சம் வாங்கிய கை குஷ்ட ரோகத்தால்
அழுகும்.
அறிவிலிகளே ! லஞ்ச லாவண்யத்தை
ஒழித்துக் கட்டுங்கள்.
வருவாய்க்கு ஏற்ப வாழுங்கள்.
தூயவாழ்க்கை வாழுங்கள்.
இனுமாக வெற்றிலை வாங்கிய தன் மனைவியை
சிறையில் அடைத்தார் சீர்மிகு வேத நாயகம்.
எத்தனை உயர்ந்த, புனித ஆன்மா !
அவரைப் போன்று தூய்மையா யிருங்கள் !
கொல்லாதீர் ! கொல்லாதீர் ! ஆன்மாவையும்
மனசாட்சியையும்.
ஆன்மீகச் செல்வம் அளவற்ற செல்வம்,
தூய்மையா யிருந்து, இப்பிறவியிலேயே
எட்டுவீர் இலக்கை.

# 13. கலப்படம் என்ற தீமை

உணவு, மருந்துகள் இவற்றில் செய்யப்படும் கலப்படம், நமது தேசத்தைப் பீடித்திருக்கும் தீமைகளில் ஒன்று. கலப்படம் என்ற தீமை வெட்ட வெட்ட, மீண்டும் மீண்டும் வளரக்கூடிய அசுரத் தன்மை உடையது. பல சூட்சுமமான வகைகளில் பேரழிவுகளை இழைக்கக் கூடியது. கலப்படம் செய்பவனுடைய மனசாட்சிக்கு, அது அளவிட முடியாத கேட்டை விளைவிக்கிறது. நாட்டு நலனுக்கும் மக்களின் வாழ்க்கைக்கும், இது ஒரு மோசமான அடியாகவும், ஆபத்தாகவும் அமை கிறது. அரசு உஷாராக இருப்பதோடல்லாமல், மக்களும், விழிப்புணர்ச்சியுடன் இருந்து, இத் தீமையைக் கட்டுப்படுத்தவும், ஆன்மீக தேசமான இந்தியாவிலிருந்து இத்தீமையை அறவே ஒழிக்க் வேண்டிய முயற்சிகள் செய்ய வேண்டும். ஒழுக்க நெறி மிகவும் குறைந்திருப்பதினாலும், தீவிர தேசபக்தி இல்லாமையினாலும், ஆன்மீகத்தை நடை முறையில் பின்பற்றுமையினாலும் உணவு மற்றும் மருந்து இவற்றில் கலப்படம் செய்யப்படுகிறது.

அரசும், பொதுமக்களும் கலப்படம் எந்த எந்த வகைகளிலெல்லாம் செய்யப்படுகின்றது என்பதை அறிய வேண்டும். மாட்டுக் கொழுப்பு, ஆட்டுக் கொழுப்பு இவைகளைக் கலந்து லேபில் ஒட்டப்பட்ட அழகான டின்களில் முத்திரையிடப் பட்டு ''நெய்'' என்று விற்கப்படுவது நம்மை அதிர்ச்சி அடைய வைக்கும். இது உண்மை. வெண்ணெயில் டால்டாவைக் கலந்து விற்கிறார் கள். உபயோகமற்ற பலவகை இலைகள், மொட்டு கள், இவற்றிற்கு வர்ணமேற்றி, தேயிலை வாசனை யேற்றி அழகான பொட்டலங்களாகச் செய்து, அழகான பெட்டிகளிலும், டின்களிலும் அழகாக

தலைப்புகள் அச்சடித்து, ஒட்டி, தேயிலை என்று வியாபாரம் செய்கிறார்கள். மலிவான காய்கறிகளை அரிசி அளவில் துருவி, நிற மேற்றி அரிசியுடன் கலக்கிறார்கள். பொடி மணல், புழுத்த பருத்திக் கொட்டை, தூக்கி எறிய வேண்டிய சோளம், மக்காச் சோளம் இவற்றைப் பொடியாக்கி இவைகளை கோதுமை மாவில் கலக்கிறார்கள். உபயோகமற்ற கொட்டைகளை துண்டுகளாக்கி சாய மேற்றி பருப்பில் கலக்கிறார்கள்.

சிறிய மரத்துண்டுகளுக்கு மஞ்சள் நிற மேற்றி, மஞ்சளுடன் கலந்து, மஞ்சள் என விற்கப்படுகிறது. இதே போன்று பல வர்ணங்கள் ஏற்றப்பட்ட சிறு மரத்துண்டுகள், பல்வேறு மசாலாப் பொருள்களாக விற்கப்படுகின்றன. கலப்படம் செய்யப்படும் வகைகளுக்கு எல்லையேயில்லை.

அடுத்தபடியாக, மருந்துகளில் கலப்படம். முற்றிலும் உபயோகமற்ற வெள்ளைப் பொடிகளை சிறிய காப்ஸ்யூல்களில் அடைத்து, போலி மருந்துகளாக விற்கப்படுகின்றன. இதனால் தேசத்தில் மிகப் பெரிய நாசம் ஏற்படுகின்றது. அநேக மருந்துகளில் தண்ணீரைக் கலந்து விடுகிறார்கள். சுலபமாகப் பணக்காரர்கள் ஆக வேண்டும் என்று மக்கள் மிகப் பெரும் குற்றங்களைச் செய்கிறார்கள். நேர்மையான வழியில் ஒருவன் பொருள் ஈட்ட வேண்டும். நேர்மையின்மையும், ஏமாற்றுதலும், ஒருவனுக்கு புற்று நோய், காசம், சூலை நோய், மூலமுளை, செவிட்டுத்தன்மை, ஊமைத்தன்மை, குருட்டுத்தன்மை, நெஞ்சு எரிச்சல், கால் எரிச்சல் முதலிய தீராத வியாதிகளைத் தரும். அடுத்த பிறவியில் அங்கஹீனர்களாகப் பிறக்கவும் வழி வகுக்கும். ஒவ்வொரு, கர்மத்திற்கும் பலாபலன்கள் நிச்சயம் உண்டு.

உணவு, பால், நெய், எண்ணெய், மருந்துகள், மருத்துவ சாதனங்கள் இவற்றில் கலப்படம் செய்வதைத் தடுப்பதில் அரசும், மக்களும் உடனடிக் கவனம் செலுத்த வேண்டும். இந்தக் குற்றம் தேசத்திற்குப் பெரும் நாசத்தை விளைவிக்கிறது. கலப்படம் என்பது ஒரு தனி மனிதன் செய்யும் பாவம், பொதுக்குற்றம், தேசீய ஆபத்து. கலப்படம் செய்பவர்கள் மிகக் கடுமையாக துன்பம் அனுபவிக்க வேண்டிவரும். மக்களின் ஒழுக்க நெறியை மேம்படுத்துவது மிகவும் அவசரமானது. எல்லாக் குற்றங்களிலும், கலப்படம் மிக மோசமான குற்றம். ஏனென்றால் அதனால் ஆரோக்கியம் அழிகிறது. கொடிய நோய்கள் பரவுகின்றன. மக்களின் ரத்தம் விஷத்தன்மை பெறுகின்றது. பல மதிப்பற்ற உயிர்கள் இழக்கப்படுகின்றன. வாழ்க்கையை நேர்மையான வழிகளில் அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதை அவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அற நெறியிலும், ஆன்மீக வாழ்விலும், வாழ வேண்டும். ஆன்மீக ஞானத்தையும் பரப்ப வேண்டும்.

## அத்தியாயம் — இரண்டு

## சமூகவியல் பிரச்சனைகள்

### 14. தொழிலாளர் நலத்தில் அற உணர்வு

வேலை நிறுத்தம் செய்ய வேண்டிய நிலைக்குத் தொழிலாளர்கள் விரட்டப்படக் கூடாது. தொழிலாளர்களின் நலனைக் கருதவேண்டியது முதலாளிகளின் கடமை. பொதுவாக, முதலாளிகள் இயந்திர புத்தி உள்ளவர்களாக இருக்கின்றனர். தொழிலாளர்களிடம் அவர்களுக்கு அனுதாபம் இல்லை. தங்கள் கீழ் வேலை பார்க்கும் தொழிலாளர்களை அவர்கள் இயந்திரங்கள் என்று எண்ணுகிறார்கள். இது தவறு. முதலாளிகளின் வளத்தைப் பெருக்குவதில் தொழிலாளர்கள் பெரும் பங்கு ஏற்பதால், தொழிலாளர்களின் நலத்தைப் பேண வேண்டியது, முதலாளிகளின் தார்மீகக் கடமையாகும். தொழிலாளர்களுக்கு நியாயமான, போதுமான கூலி கொடுக்க வேண்டும். அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமேயன்றி, அவர்களை வேலை நிறுத்தம், ஆர்பாட்டம் இவை செய்யும் நிர்பந்தத்திற்கு ஆளாக்கக்கூடாது. ஈவு இரக்கமற்ற இதயத்துடன் தொழிலாளர்களைச் சுரண்டுவது, அறநெறிக்குப் புறம்பாகும்.

சிறு விஷயங்களுக்குக் கூட மிக முக்கியத்துவம் உண்டு. ஆலைகளில் முக்கியமாக இரும்பு, சிமென்டு ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் கண்ணில், வேற்றுப் பொருள்கள் விழாமல் காக்கக் கூடிய கண்ணடிகள், மற்ற தடுப்பு சாதனங்கள் முதலியனவற்றை அவர்களுக்கு வழங்கும் பொறுப்பு இந்த ஆலை முதலாளிகளைச் சாரும். விபத்து காரணமாகக் கண்ணில் ஏதாவது புண் ஏற்பட்டால்

உடனடியாகக் கண் மருத்துவரின் சிகிட்சைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு கண்ணில் தானே காயம்பட்டிருக்கிறது என்று அ ச ட் டை ய ா க இருந்தால், ''அனுதாப கண் நோய்'' என்ற வகையில் நல்ல கண்ணும் கெட்டுப்போக வாய்ப்பு உண்டு.

## 15. சோஷலிசவாதிகளுக்குச் செய்தி

சோஷலிசவாதிகளின் கொள்கையும் நோக்கமும் பெரிதும் பாராட்டுக்குரியவை. பொருட்களையும், செல்வத்தையும் சம்மாகப் பங்கிடுவதினாலும், முதலாளிகளையும், நிலப்பிரபுக்களை ஒழிப்பதினாலும், மக்களை மகிழ்ச்சியுடன் வாழ வைக்க அவர்கள் விரும்புகிறார்கள். அவர்கள் ஏழைகளின் பரிதாப நிலையைக் கண்டு வேதனைப் படுகிறார்கள். சில தொண்டர்கள் மிகவும் உண்மையாக உள்ளனர். இந்தவகைப் பணிக்கு அவர்கள் தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணித்துள்ளனர். தாங்களும், தன்னலமற்ற தொண்டர்கள் என்று காட்டிக் கொள்ள சிலர் சோஷலிச இயக்கத்தில் சேர்ந்துள்ளனர். அ வ ர் க ளு டை ய பாவனை, எண்ணம், மனோபாவம் ஒன்றுமே சரியில்லை.

சோஷலிசவாதிகள் ''முதலாளிகள், மன்னர்கள், சக்ரவர்த்திகள் இவர்கள் எங்களுக்கு வேண்டாம்'' என்கிறார்கள். மேலும் ''எல்லாக் குழந்தைகளுக்கும் அரசு கல்வி அளிக்கும். பொதுவான சமையல் அறையிலிருந்து அனைவருக்கும் உணவு வழங்கப்படும், சினிமா டிக்கட்டுகள் வழங்கப்படும். எல்லோருடைய நலத்தையும் அரசே கவனித்துக்கொள்ளும். அவரவர்கள் தகுதி, வயது, திறமை இவற்றிற்கு ஏற்ப அனைவரும் தொழில் செய்ய வேண்டும். பொது மக்களுக்கு,

படிக்கவும், பொழுது போக்கவும், உல்லாசக் கேளிக்கைகளுக்கும், விளையாட்டிற்கும் நிரம்ப ஓய்வு நேரம் கிடைக்கும். அனைத்து மக்களும் பேரானந்தமடைவர். அவர்களுக்கு துன்பமோ கவலைகளோ இருக்காது. அவர்களுக்கு வேண்டிய உணவு கிடைக்கும்'' என்று சோஷலிசவாதிகள் கூறுகிறார்கள்.

இது அருமையான தத்துவம். ஆனால் இது ''விரோசனத் தத்துவம்'' அதாவது வெறும் உடல் பற்றிய தத்துவம். சொகுசான வாழ்க்கையே அவர்களின் குறிக்கோள். ஆனால் சாந்தி, தெய்வீக ஞானம், இவற்றிற்கு விரோதி. சொகுசு வாழ்க்கை, உணவு மட்டும் ஒருவனை முழுமையான வனாகவும், அழிவற்றவனாகவும் செய்ய முடியாது. அது மோக்ஷத்தை அளிக்காது. அது, அழிவற்ற ஞானத்தைப் பெற வழி வகுக்காது.

அனைத்து புவனம், உடல், மனம், புத்தி, ஐம் பொறிகள் இவற்றிற்கெல்லாம் அடிப்படை யாகவும், சமுதாயத்தின் அஸ்திவாரமாகவும் திகழக்கூடியது அழிவற்ற ஆன்மா அல்லது பரம் பொருள். இப்படிப்பட்ட ஒரு ஆரம்பமும், ஆதரவும் இருப்பதாக ஒப்புக்கொள்ளாத, தன்னை உணர்வதை ஒட்டுமொத்தக் குறிக்கோளாகக் கொள்ளாத, எந்த ''இஸமும்'' விரைவிலேயே மாயமாய் மறைந்துவிடும்.

பேரரசு, தெய்வமடந்தைகள், நீண்ட ஆயுள், பெருமைகள், புஷ்பகவிமானங்கள் போன்ற சுக போகங்களை வெறுத்து ஒதுக்கி வாழ்க்கைக்கு அப்பால் உள்ள உண்மையை அறியவேண்டும் என்று அவாவுடைய நசிகேதன் போன்ற ஞானிகள் தான் உண்மையாகவே உலகிற்குத் தேவைப்படு

கிறார்கள். இந்த உலகின் செல்வமெல்லாம் எனக்கு அமரத்துவத்தை அளிக்குமா? அழிவில்லா பெரு வாழ்வு பெறும் வழியை எனக்கு தயவு செய்து கூறுங்கள். எனக்கு இந்த உலகிலுள்ள அத்தனை செல்வமும் கிடைத்தால்கூட வேண்டாம் என்று தன் கணவன், யாக்ஞவல்கிய முனிவரிடம் சொன்ன மைத்ரேயி போன்றவர்கள்தான் இந்த உலகிற்கு மிக முக்கியமானவர் ஆவர்.

தான் என்ற ராட்க்ஷச ஆவேசம் தான் செய்வது மட்டுமே சரி என்ற ஆபத்தான எண்ணம், போலித்தனம், வாக்குநயம் இன்மை இவைகளால் பீடிக்கப்பட்ட இரண்டாந்தர சோஷலிசவாதிகளால் சமுதாயத்திற்கு எந்த நன்மையும் பயக்க முடியாது.

கர்ம யோகம், வேதாந்தம், பக்தி யோகம் — ஒருங்கிணைந்த யோகம் இவற்றைப் பற்றிய ஞானம், ஒரு தன்னலமற்ற தொண்டனுக்குத் தேவை. இயமம், நியமம், அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம், சேவை, இரக்கம், உலகளாவிய அன்பு, தன்னடக்கம், எளிய வாழ்க்கை, பொறுமை, மன்னிக்கும் மனப்பான்மை இவற்றைக் கடைப் பிடிப்பவர்களாக அவர்கள் இருக்க வேண்டும். அவர்கள் சில காலம் தனித்திருந்து ஒரு பிரம்மநிஷ்ட குருவிடம் ஜபம், கீர்த்தனம், தியானம், பிராணாயாமம் இவைகளைப் பயில வேண்டும். இந்தத் தகுதிகளை எல்லாம் பெற்ற பிறகே அவர்கள் சேவை செய்யக் களத்தில் இறங்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்களால் உபயோகமான பணி ஆற்ற முடியும்.

சமுதாயத் தீமைகள் அத்தனையையும் களைய சோஷலிசத்தினால் முடியாது. முழுமையான சாந்தி, ஆனந்தம் இவற்றை மனிதனுக்கு அளிக்க முடியாது. அதனால் மனதையும், இந்திரியங்களையும் கட்டுப்படுத்தி, அழியாப் பரம்பொருளைப் பற்றிய அறிவை அவனுக்குக் கொடுக்கின்றபோது மனிதனுக்கு முழுமையான ஆனந்தம், நிலையான இன்பம், அமரத்துவம் இவற்றைப் பெற வழி காட்ட முடியும்.

சோஷலிச வாதிகள் உலகம் பூராவும் சோஷலிசம் பரவவேண்டும் என்று விரும்புகிறார்கள். இதை நிறைவேற்ற அவர்கள் பலமான முயற்சிகளில் இறங்கியுள்ளனர். இது சாத்தியமா? இல்லை! ஒரு பொழுதும் இல்லை! இவை அத்தனையும் கற்பனை. எல்லா இயக்கங்களுக்கும் பின்னணியில் ஆண்டவனின் கைவண்ணம் இருக்கிறது. ஆண்டவன் அனுக்கிரகம், தர்மம், நேர்மை, நியாயம் இவற்றின் ஆதரவு பெற்றுள்ள இயக்கங்களே நீண்டநாள் சிறப்பாக நிலைத்திருக்கும். தன்னலத்திலிருந்து திடீர் என்று உதிக்கும் மற்ற எல்லா இயக்கங்களும், விரைவிலேயே அழிவது உறுதி.

## 16. புலனடக்கமும் — ஜனப் பெருக்க பிரச்சனையும்

சரித்திரகால ஆரம்பத்திலிருந்தே, தன்னடக்கமும், புலன்களின் போக்கைக் கட்டுப்படுத்தும் பாங்கும் இந்திய கலாச்சாரத்தின் ஆணிவேராகத் திகழ்ந்து வந்திருக்கின்றன. பல அன்னிய கலாச்சாரப் புயல்களின் தாக்குதல்களை சமாளித்து இந்திய கலாச்சாரம் வாழ்வதின் இரகசியம் என்ன

வென்றால், அது இந்தியாவின் தார்மீக அடிப் படையின் பலமே. காம இச்சைக் கட்டுப்பாடு, இச்சைகளின் கட்டுப்பாட்டிற்கு வழிவகுக்கும்.

நமது தேச ஜனத் தொகையின் அதிவேகப் பெருக்கம், உணவு பற்றாக்குறை, அதன் விளைவாக வெளி நாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்ய பெரும் பணம் செலவிட வேண்டிய சூழ்நிலை இவைகளால், நமது தேசியத் தலைவர்கள், குடும்பக் கட்டுப்பாடு, திட்டமிட்ட குடும்பம், இவற்றைப் பற்றி தீவிரமான பிரச்சாரம் செய்யும் நிர்பந்தத்திற்கு ஆளாகியுள்ளனர். பத்திரிகைகள், சினிமா செய்திப் படங்கள் மற்றும் சில புதிதாகத் தொடங்கப்பட்டுள்ள குடும்பக் கட்டுப்பாடு நிலையங்கள், இப்பொழுது ஜனப்பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியத்தை பிரச்சாரம் செய்கின்றன. தேசம் வாழ வேண்டுமென்றால், குடும்பக் கட்டுப்பாடு இன்றியமையாதது என்பதை பல உயர் தலைவர்களும், எழுத்தாளர்களும், மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்றனர்.

18-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவின் ஜனத்தொகை 10 கோடி. 18-ம் நூற்றாண்டின் மத்தியில் 18 கோடியாக உயர்ந்தது. மீண்டும் 19-ம் நூற்றாண்டின் மத்தியில் அது 15 கோடியாகி, இப்பொழுது அதாவது ஒரு நூற்றாண்டிற்குள் இரண்டு மடங்காக (சுமார் 36 கோடியாக்) பெருகியுள்ளது. (வரும் ஜனத்தொகைக் கணக்கீடு இன்னும் அதிகமான எண்ணிக்கையைக் கொடுக்கலாம்).

இந்த அபரிமிதமான ஜனப் பெருக்கம் இந்தியாவில் மட்டுமின்றி, உலகின் பல நாடுகளிலும் காணப்படுகிறது. மல்துஸ் (Malthus) என்பவரின் ஜனப் பெருக்கத்தைத் தடுக்க

ஒழுக்கத்தின் அடிப்படையில் கட்டுப்பாடு தேவை என்ற கொள்கையைப் பின்பற்றும், ஐரோப்பிய நாடுகளில் கூட, உதாரணமாக இத்தாலி நாட்டில், ஜனப் பெருக்கம் ஒரு தேசீய பிரச்சனையாக இருக்கிறது. இன்று 160 கோடியாக உள்ள ஜனத் தொகை இருபதாம் நூற்ருண்டின் இறுதியில் 320 கோடியாக உயரும் என்று ஐக்கிய நாடுகளின் சபையின் உணவு, விவசாயத்துறையின் முன்னுள் இயக்குனரும், நோபல் பரிசு பெற்றவருமான 'பாய்டு — ஓர் பிரபு' **(Lord Boyd — orr)** என்பவர் கூறுகிருர்.

## ஜனப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது எப்படி?

கோடிக்கணக்கான மக்களுக்கு எப்படி உண வளிப்பது? உயர்ரக விவசாய முறைகள், தரிசு நிலங்களைப் பண்படுத்தி விவசாயம் செய்தல் முதலியனவற்றைக் கடைப்பிடித்தும் கூட ஜனப் பெருக்க வேகத்தை எட்டிப்பிடிக்க, உணவு உற்பத்தி வேகத்தினுல் இயலவில்லை. எனவே வாழ்க்கைத்தரம் குறையாமல் இருப்பதற்கும், பட்டினி, பஞ்சம், இவற்றைத் தவிர்ப்பதற்கும், இவைகளின் விளைவாக ஏற்படும் ஒழுக்கச் சிதைவை நிறுத்துவதற்கும், ஜனப் பெருக்கம் கட்டுப்படுத்தப் படவேண்டும். ஐக்கிய நாடுகளின் சபை விசேஷப் பிரிவுகள் இப்பிரச்சனைக்கு நிலையான தீர்வு ஒன்றைக் காண்பதில் சுறுசுறுப்பாக ஈடுபட்டுள்ளன.

ஐ. நா. ஜனத்தொகைக் கமிஷன் :— இதில் ஆன்மீக உள்ளொளி பெற்ற உறுப்பினர் ஒருவராவது உள்ளாரா என்பது சந்தேகம் — ஆசிய தூர கிழக்கு நாடுகளுக்கான பொருளாதாரக் குழுவின் உதவியுடன் இப்பொழுது பணியாற்றிக் கொண்டுள்ளது.

ஜனப்பெருக்கம் கட்டுப்படுத்தப்பட வேண்டும் என்பதில் கொள்கை அளவில் சந்தேகமில்லை. ஆனால் எப்படிச் செய்வது? சிறந்த குடும்பக் கட்டுப்பாடு முறையினால்தான் இதைச் செய்ய முடியும் என்பது தெளிவு. அப்படி என்றால் என்ன பொருள்? இந்திய சுகாதார மந்திரி ராஜ்குமாரி அமிர்தகௌர் கூறுவதாவது, ''நம் மக்களில் படித்தவர்கள், நகரங்களில் வாழும், ஆண், பெண்களைப் பற்றியே சிந்திக்கிறார்கள் என்பதை நான் சொல்லித்தான் தெரியவேண்டுமென்பதில்லை. நமது சமூகநல ஊழியர்களும், அவர்களுடைய ஸ்தாபனங்களும் தாங்கள் பணியாற்றும் நகரங்களில் உள்ள ஏழை மக்களிடையே உள்ள சில பெண்களுக்கு மட்டுமே சேவை செய்ய முடியும். ஆனால் அவர்கள்கூட மேலை நாடுகளிலே வேரூன்றியுள்ள இயற்கை கருத்தடை சாதனங்களைத்தான் பயன்படுத்த நினைக்கிறார்கள். இந்தக் கருத்தை என்னால் ஒப்புக்கொள்ள முடியவே இல்லை''. குடும்பக் கட்டுப்பாட்டிற்கு அநேகமாக எல்லோரும் கூறும் வழி கருத்தடை சாதனங்களே என்பது உண்மை. நமது படித்த தலைவர்களில் பெரும்பான்மையோர் அமிர்தகௌர் போன்ற விதிவிலக்குகளைத்தவிர — நமது நாட்டு கலாச்சாரத்தைப் பற்றிய மாபெரும் அறியாமையினாலும், அதை முழுமையாகப் புறக்கணித்தும் மேலை நாட்டினரை அப்பட்டமாகப் பின்பற்றும் நிலைக்குத் தங்களைத் தாழ்த்திக் கொள்வது மிகவும் அனுதாபத்திற்குரியது.

## மிகச் சிறந்த தீர்வு

வேத சாஸ்திரப்படி ஒருவன் மாணவப் பருவத்தில் பிரம்மச்சரியத்தைத் தொடர்ந்து கடைபிடிக்க வேண்டுமென்றும், படிப்பு முடிந்தவுடன்

திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்றும், அறிவுறுத்தப்படுகிறான். ஆனால் திருமணம் என்பது வம்ச விருத்திக்காக மட்டுமே என்றும், கேவலம் சிற்றின்பத்திற்காக இல்லை என்பதும் வற்புறுத்தப் படுகிறது.

தன்னடக்கம் அவர்களுக்கு தார்மீக பலத்தையும், ஆன்மீக நோக்கையும் அளிக்கிறது. தன்னடக்கம் மூலம் அவர்கள் அறநெறிச் செம்மையையும், உயர்தர புத்தியையும் பெறுகிறார்கள். குடும்பக் கட்டுப்பட்டிற்குத் தன்னடக்கத்தைத் தவிர வேறு பாதுகாப்பான வழி இல்லை என்பது உண்மை. குடும்பக் கட்டுப்பாட்டு நிலையங்கள் எத்தனை ஏற்படுத்தினாலும், கருத்தடை சாதனங்கள் பற்றி எவ்வளவுதான் பிரச்சாரம் செய்தாலும், காலங்காலமாக ஆன்மீகப் பின்னணியில் ஊறி உள்ள இந்திய மக்களிடையே இவை எடுபடாது. தன்னடக்கத்தைத் தவிர வேறு எந்த முறையும் இந்தியாவில் மட்டுமல்ல உலகில் வேறு எங்குமே, தார்மீக ஆன்மீக வெற்றியாக முடியாது.

இந்தியாவில் குடும்பக் கட்டுப்பாட்டிற்கு, செயற்கைக் கருத்தடை சாதனங்களை உபயோகிப்பதற்கு முதன்முதல் எதிர்ப்புக் குரல் கொடுத்தவர் மஹாத்மா காந்தி. செயற்கைக் கருத்தடை சாதனங்கள் தம்பதிகளுக்குச் சிற்றின்பத்தில் திளைக்க சுதந்திரம் அளிக்கிறது. மேலும் திருமணம் ஆகாத ஆணும், பெண்ணும்கூட சிற்றின்ப வெறியில் பயமின்றி உழல இவை வழிவகுக்கின்றன என்று மஹாத்மா கூறினார்.

காந்திஜி கூறுவதாவது:— 'கிராம மக்கள், தார்மீகக் கட்டுப்பாட்டைக் கடைபிடித்து, செயற்கைக் கருத்தடை சாதனங்களினால்

குடும்பத்தின் அளவை கட்டுப்படுத்துவதைவிடச் சிறப்பாகக் கட்டுப்படுத்துகிறார்கள். செயற்கை முறைகள் குற்றம் செய்வதை அனுமதித்து ஊக்குவிப்பது போலாகிறது நோயைவிட மருந்து மோசமானதாக இருக்கும்.''

## சிற்றின்பவாதிகளின் எதிர்ப்பு

மஹாத்மாஜி இப்படிச் சொன்ன உடனேயே, பல புகழ் பெற்ற தலைவர்கள், டாக்டர்கள், வழக்கறிஞர்கள், கல்வியாளர்கள், அத்துடன் வெளிப்படைக் காரணங்களுக்காக நான் பெயர் குறிப்பிட முடியாத, மஹாத்மாவின் முன்னணி சீடர்களில் சிலர், இவர்கள் அனைவரும் மஹாத்மாவின் கூற்றை மறுக்க முற்பட்டனர். ஆண், பெண் இவர்களின் இயற்கை உணர்ச்சிகளை அடக்குவது கடுமையான விளைவுகளை ஏற்படுத்தும் என்றும், பெரும் எண்ணிக்கையில் மக்கள் நரம்பு நோயினால் பாதிக்கப்படுவர் என்றும், வாழ வேண்டும் என்ற ஆர்வம், புத்தி முதலியவை மங்கிவிடுமென்றும், வாழ்க்கை உப்பு சப்பற்றதாகி விடுமென்றும், இன்னும் என்னென்னவோ கூறுகிறார்கள். ஆனால் இந்தக் கூற்றுக்களுக்கெல்லாம் அடிப்படையே கிடையாது என்றும், இக்கூற்றின் உண்மைப் பொருள் தன்னடக்கத்தின் எதிரிகள் தங்களின் காம இச்சையை வெளிப்படுத்துவதே என்பதையும், பெயர் பெற்ற விஞ்ஞானிகளும், டாக்டர்களும், எண்ணிலடங்கா பல்வேறு மத நூல்களும், ஐயம் திரிபர நிரூபித்துள்ளன. மேற்சொன்ன வகையில் உள்ள கூற்றில் குறிப்பாகச் சிலவற்றை நாம் இங்கு மேற்கோள் காட்ட விழையும் பொழுது, மேலை நாட்டு நிபுணர்களின் கூற்றுக்களையே எடுத்தாள விரும்புகிறோம். ஏனென்றால் உலகாயதவாதி மால்துஸின்

(Malthus) ஆவி அவர்களைத்தான் சுற்றிச் சுற்றி வருவதால் அவர்கள்தான் மால்துஸை நன்கறிவர். மேலும் நமது படித்த மேதாவிகள் தங்களுடைய மத நூல்களில் உள்ள நம்பிக்கையைவிட அதிக நம்பிக்கையை இந்த மேலை நாட்டு அறிஞர்களிடம் தான் வைத்திருக்கின்றனர். முழுக்க முழுக்க மேலை நாட்டை அவர்கள் காப்பி அடிப்பதைக் கவனியுங்கள்.

## தற்கட்டுப்பாடு தவறு அல்ல

லண்டன் ராயல் கல்லூரியைச் சேர்ந்த ஸர் லயோனல் பீலி என்பவர் கூறுவதாவது:—

''காம இச்சையை அடக்குவது மனிதனுக்கு ஒரு பொழுதும் இதுவரை தீங்கிழைத்ததில்லை. பிரம்மச்சரியம் என்பது மனோபாவத்தின் ஒரு நிலையின் வெளிப்பாடு என்ற வகையில் கடைப் பிடிக்கக் கடினமானது அல்ல''.

பேராசிரியர் ஓஸ்டர்பு என்பவர், பீலி கூறுவதை ஒட்டிக் கூறுவதாவது:— காம உணர்ச்சியைக் கட்டுப்படுத்துவதே தார்மீக பலம். அறிவு இவற்றால் முற்றிலுமாக அடக்கி வைக்க முடியாத அத்தனை திருட்டுத்தனமான சர்வ சக்தி வாய்ந்தது அல்ல. சிறந்த ஆரோக்கியமும், யாண்டும் புதிதாக விளங்கும் சக்தியும், இந்தத் தன்னடக்கத்திற்குக் கிடைக்கும் வெகுமதிகள் என்று ஒருவன் அறிய வேண்டும்''.

ஸர் ஆண்டிரு கிளார்க் கூறுவதாவது:— தன்னடக்கம் தீங்கு செய்வதில்லை. வளர்ச்சியைத் தடுப்பதில்லை. சக்தியையும், சிந்தனைத் திறத்தையும் வளர்க்கிறது.

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு சிறந்த மார்க்கம் தன்னடக்கமே என்று அமெரிக்க பொது உடைமை வாதி ஜோசப் ஹெச். ஜே. ஸ்பென் கிளார் அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார். ''ஜனத் தொகைப் பெருக்கத்திற்கு ஒழுக்கக் கட்டுப்பாடு ஒரு தலை சிறந்த தீர்வாகும்'' என்கிறார் அவர்.

அவருடைய கருத்தை ஒத்துக் கொள்ளாதவர் களுக்கு காந்திஜி தன் சொந்த வாழ்க்கை மூலம் பதிலளித்தார். 1920-ல் எழுதப்பட்ட தனது சுய சரிதத்தில் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்: ''1906-ம் ஆண்டிலிருந்து நான் பிரம்மச் சரியத்தைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தேன். ஆண்டவனின் அருளில் நம்பிக்கை வைத்துத் தொடங்கினேன். அன்றிலிருந்து தன்னடக்கம் ஒரு வழியாக பின்பற்றப்பட்டு வருகிறது''. காந்திஜி ஓர் அனுபவசாலி. அவர் கூறியது அத்தனையும் அவருடைய அனுபவங்களிலிருந்து வந்தவையே. அவர் ஓர் ஏட்டுச் சுரைக்காய் தத்துவவாதி அல்ல. ஒவ்வொரு துறையிலும், அனைத்து வெற்றிகளும் கிடைக்க முக்கியத் தகுதி, தன்னடக்கமே என்பதை அவர் வலியுறுத்தினார்.

ஆன்மீக முழுமையை அடைவதற்குத் தேவை யானது மனம், வாக்கு, காயம். இவற்றில் முழு மையான கட்டுப்பாடு என்பது என் து கொள்கை. எல்லாப் பொறிகளையும் செம்மையாகக் கட்டுப் பாட்டில் வைத்திருத்தல் என்பதே பிரம்மச் சரியத்தின் பொருள். நிறைவான பிரம்மச்சாரிக்கு சாதிக்க முடியாததே இல்லை''.

நமது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள பீஷ்மர், அனுமான், இலக்குமணன் இவர்கள் அனுஷ்டித்த பிரம்மச்சரியம், எல்லோராலும் கடைப்பிடிக்க

முடியாதது என்பது தெளிவு. இருந்த பொழுதிலும், உடல், தார்மீக, ஆன்மீக வளர்ச்சிக்கு நல்ல கட்டுப்பாட்டுடன் கூடிய, புனிதமான தாம்பத்திய உறவு இன்றியமையாதது. நாத்திகராகவும், பொது மக்கள் பலரால் பின்பற்றப்படும், ஒப்புக் கொள்ளப்பட்ட, ஸ்தாபன மதங்களில் நம்பிக்கையற்றவராகவும், ஆனுல் ஆன்மீக உணர்வுள்ள பேரறிஞர் பெர்னுட்ஷா உலகம் முழுவதும் ஒப்புக் கொள்ளும் கீழ்க்கண்ட கோட்பாட்டைக் கூறியுள்ளார்.

''ஆசையை அடக்காவிட்டால் நாம்
நம்மைக் அழித்துக் கொள்வோம்''.

ஜனப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு, பலனுள்ள வழியாக விளங்கும் சாத்தியக்கூறு, தன்னடக்கத்திற்கு இருக்கிறது என்பதில் திருப்தி அடையாத, உலகாயதவாதிகள் கூறுவதாவது, ''தன்னடக்கம் போற்றப்படக்கூடிய இலட்சியம் என்பதில் ஐயமில்லை. ஆனுல் ஓர் ஆண்டில் ஒரு முறை தவறினுல் கூட, கருத்தரிப்பதைத் தவிர்க்க முடியாது அல்லவா''. உலகாயதவாதிகளின் ''புனிதத் தன்மை'' இந்தக் கூற்றை உறுதிப் படுத்தியதோ என்னவோ! ஆனுல் இல்லறத் தார்கள், இதைத் தங்கள் வாழ்க்கையில் பரிசீலித்து ஒரு முடிவுக்கு வரலாம். தூய்மையான, முறையான, ஒழுங்கான இல்லற வாழ்க்கை ஜனப் பெருக்கத்தை பெரும் அளவில் உண்மையாகவே கட்டுப்படுத்தும் என்று நம்பு வதற்கு நமக்குப் பல ஆதாரங்கள் உள. இதில் சந்தேகமில்லை.

## செயற்கை முறையில் அபாயங்கள்

''நமது சிறந்த கலாச்சாரத்திற்கும், பாரம் பரியத்திற்கும், உண்மையாக இருக்கும் நமக்கு, குடும்பக்கட்டுப்பாடு பற்றி எந்த வழிவகைகள் இயல்பாக நமது உள்ளத்தில் உதிக்கின்றனவோ, அவைகளுக்கு நாம் உத்வேகம் கொடுக்க வேண்டும் என்பதே எனது அபிப்பிராயம். உலகில் வேறு எந்த நாட்டிலும், நமது தேசத்தைப் போன்று, எல்லா முனிவர்களும், மகான்களும் தன்னடக் கத்தை இவ்வளவு அழுத்தமாக சிபார்சு செய்ய வில்லை. எனவே மக்கள் பெருக்கத்திற்கு எதிராக நமது பாசறையில் இருக்கும் ஆயுதங்களில் முதன் மையானது, ஆண், பெண் இருபாலரிடையேயும் அதுவும் முக்கியமாக அவர்களிடம் இருக்க வேண்டிய தன்னடக்கமாகும். சாதாரண மக்களுக்கு செயற்கை முறைகள் சுலபமாகத் தோன்றுவதினுல், அதை எல்லோரும் சிபார்சு செய்கிருர்கள். நான் இதை அபாய அறிவிப்பாகக் கருதுகிறேன். ஏனென்ருல், குறுகலாக இருந்த பொழுதிலும், நேரான பாதைதான் தீர்வைக் கொடுக்கமுடியும். மிருக இச்சைக்கு உள்ளத்தில் இடமளிக்க உதவும் முறைகள்தான் மனிதனை மனிதனுக வைத்திருக்கும் என்பது சரியான வாதம் இல்லை.'' (இவ்வாருக ராஜகுமாரி அமிர்த கௌர், இந்த நாட்டின் பெரும்பான்மை மக்களின் கருத்தை ''ஹரிஜன்'' பத்திரிகையில் பிரதிபலித்திருந்தார்.)

தற்காலத்தில் நடைபெறும் உலகாயதத் தாக்குதலை முறியடிப்பதில், இந்திய மகளிருக்கு பெரும் பங்கு உண்டு. இந்திய மகளிருக்கு இயற்யாகவே, மத உணர்வு இருப்பதால், அவர்கள் தான், காலங்காலமாக நமது சமுதாயத்தின் ஆன்மீகத் தன்மையைக் காப்பாற்றி வருகின்றனர்.

நவநாகரீக தூதுவர்களின் தத்துவத்தை நம் மகளிர் ஒப்புக்கொள்வது என்பது அவர்களுக்கு இழுக்காகும். பத்தாண்டுகளுக்கு முன் மகாத்மாஜி எழுதியதாவது:— ''குடும்பக் கட்டுப்பாட்டிற்கு செயற்கை முறைகளை பெண்கள் மேல் திணிப்பது பெண்ணினத்திற்கு இழைக்கப்படும் அவமானம் என்பது எனது எண்ணம். தங்கள் பெருமைக்கு ஏற்றதில்லை என்று பெரும்பாலான பெண்கள் செயற்கை முறைகளை ஒதுக்கித் தள்ளிவிடுவார்கள், என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.''

செயற்கைக் குடும்பக்கட்டுப்பாடு முறைகளினுல் ஏற்படும் அபாயகாரமான, விளைவுகளை நம் தலைவர்கள் உணரும் நேரம் உண்மையான இந்தியாவாக விளங்கும் கிராமங்களில் தன்னடக்கத்தின் பெருமையைப் பரப்பவும், பால்ய விவாகத்தை ஒழிக்கவும், தூய்மையான ஆரோக்கியமான வாழ்வின் அவசியத்தை வற்புறுத்தியும், இத்தலைவர்கள் பிரச்சாரம் செய்ய வேண்டும். அமிர்தகௌரை சுகாதார மந்திரியாகப் பெற்றிருக்க இந்த நாடு புண்ணியம் செய்திருக்கிறது. செயற்கைக் கருத்தடைகளை ஆதரிப்பவர்கள் பலர் இருந்த போதிலும், அமிர்தகௌர் அவர்கள் மீண்டும் வலியுறுத்துவதாவது ''நமது ஜனங்களின் அறியாமை அவர்களுக்கு விஞ்ஞான முறையில் மருத்துவ வசதி இல்லாமை, செயற்கை முறைகளின் மிகுதியான விலை இவைகளினுல், செய்கை முறைகள் நமது தேசத்தில் முற்றிலும் நடைமுறை சாத்தியமன்று.

பல வருடங்களாக இம்முறைகள் பயன்படுத்தப் பட்டு வரும் மேலை நாடுகளில், இந்த முறையினுல், தேக ஆரோக்கியம் மனநிறைவு, தார்மீக நலம், முதலியன ஏற்பட்டிருக்கின்றன என்று நிரூபிக்க முடியுமா என்று நான் சவால் விடுகிறேன்.

மாருக இந்த முறையினுல் ஒழுக்க நெறிகளின் தரம் தாழ்ந்து போகவும் மனித குலத்தை விருத்தி செய்யும் அடிப்படைப் பொறுப்பை ஆணும், பெண்ணும் மதிக்காமல் இருக்கவும், பெரும் அளவில் இம்முறைகள் காரணமா யிருந்திருக்கின்றன. பெருகிவரும் ஜனத் தொகையைக் கட்டுப்படுத்த குடும்பக் கட்டுப்பாடு இந்தியாவிற்கு அவசியம். நகரங்களிலும், குக்கிராமங்களிலும் இருக்கும் மக்களின் ஆரோக்கியத்திற்காகவும். அங்குள்ள நோயாளிகள் கஷ்டப்படுபவர்கள், இவர்களின் சேவையிலும் நான் மேலும் மேலும் ஈடுபட்டு வரும்பொழுது செயற்கை முறைக் குடும்பக் கட்டுப்பாடு நமது தேசத்தில் புகுத்தப்படுவது தற்கொலேக்கு ஒப்பாகும் என்ற முடிவிற்கு நான் வருகிறேன். [''ஹரிஜன்'' பத்திரிகை].

கொள்கையில் உண்மையான பிடிப்பும், ஆன்மீக நோக்கும் ஒருவன் பெறவில்லேயென்ருல், தன்னடக்கம் தோல்வி அடையும் என்பதைக் கவனிக்க வேண்டும். மக்கள் பெருக்கத்தைக் கட்டுப் படுத்தல் மட்டுமல்லாது, தேசத்தின் தார்மீக, ஆன்மீக வளர்ச்சிக்கும், வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், தன்னடக்கம் ஒன்றேதான் வழி என்பது அடிப்படை உண்மை. தன்னடக்கத்தின் சந்தேகமற்ற வெற்றியை இந்தியா தனது உதாரணத்தின்மூலம் உலகிற்கு நிரூபிக்க வேண்டும்.

## 17. திரைப்படம் என்ற பிரச்சனே

பொதுவாகத் திரைப்படம் அதிகமாகப் பார்ப் பதினுல் ஆரோக்கிய பாதிப்பும், கண் பார்வைக் குறைவும், பல கெட்ட பழக்கங்களின் தொடர்பும் ஏற்படும். திரைப்படம் என்பது ஒரு கேடு அல்ல,

ஆனுல் உணர்ச்சிகளைத் தூண்டும் 'காட்சிகளும், புலன்களுக்குப் பரபரப்பூட்டும் சம்பவங்களும் நிறைந்த திரைப்படத்திஞல் காமம், வெறுப்பு, டம்பம், பரபரப்பு, எல்லாவகையான உணர்ச்சி பாதிப்புகள், தற்பெருமை, ஒழுக்கநெறி, அறநெறி இவற்றிற்கு எதிராக மக்களிடையே கிளர்ச்சியை ஏற்படுத்தும். அது வெகுவாகக் கண்டிக்கப்பட வேண்டியதாகிறது. கல்வி, மதம், ஆன்மீகம் இவற்றைப் பரப்பும் திரைப்படங்களால் தீங்கு ஒன்றுமில்லை என்பது நிச்சயம். ஆனுல் ஒழுக்கவிதி, பண்பாட்டுப் பழக்கங்கள் இவற்றை மீறி நடக்க விழைவது, மனித சுபாவமாக, எப்பொழுதுமே இருந்து வந்திருக்கிறது.

## 18. நாத்திக இயக்கங்கள்

பொதுவாக சுயமரியாதை இயக்கம் உலகத்திற்கு சிறந்த வரப்பிரசாதமாக அமைந்துள்ளது. இந்த இயக்கத்தின் ஒவ்வொரு உறுப்பினரும், எல்லா உயிரினங்களையும் தனது ஆன்மாவாகக் கருதி, மதிக்க வேண்டும். மனம், வாக்கு, காயம் இவற்ருல் எந்த உயிரையும் அவன் புண்படுத்தக் கூடாது. இப்படிச் செய்வது ஒருவனுக்கு ஆத்ம ஞானம் ஏற்பட வழியாக அமைகிறது. இப்படிப் பட்ட, சிறந்த, ஆன்மீக எழுச்சியை ஏற்படுத்தக் கூடிய இயக்கத்தை நிறுவியவர் பாராட்டிற்கும், புகழுக்கும் உரியவர்.

ஆனுல், இந்த இயக்கத்தினர், விரோதம், பொறுப்பு, இவை காரணமாக பிறர் மனதைப் புண்படுத்திஞல், இந்த இயக்கம் சாத்தான் இயக்கமாக மாறிவிடும்.

நீதிக்கட்சி, உண்மையிலேயே பாராட்டப்பட வேண்டியவை. அநீதிக்கு ஆளானவன் அல்லது

அடக்கி ஒடுக்கப்பட்டவன் சார்பில் எவன் நீதி கேட்கிருனே, அவன் தான் நீதி இயக்கத்தின் உண்மையான உறுப்பினன். அவன் உலகில் நடமாடும் தெய்வம். அவனுக்கு விரைவில் பிரம்ம சாட்சாத்காரம் கிடைக்கும். ஆனல், எவனொருவன் வெறுப்பு, கெட்ட எண்ணம், பொருமை, இவற்றல் கலகத்தை உண்டுபண்ணுகிருனே, அவன் நிச்சயமாக பிசாசின் தன்மையைப் பெறுகிருன். மருட்சியாலும், பொய்மையாலும், அவர்களுடைய சிந்தனு சக்தி அழிந்துவிடும்.

பொருமை, தன்னலம், வெறுப்பு, இவற்றின் அடிப்படையில் எழுந்த தெய்வீகத் தன்மையற்ற இயக்கங்கள் விரைவிலேயே அழியும் என்பது உறுதி. உண்மை என்ற அடிப்படை இன்மையால் அவை வாழ முடியாது.

ஆண்டவனே! இந்த மக்களுக்கு நல்ல எண்ணம், ஞானம், தூய்மை, ஆன்மீக பலம், உள்ளொளி இவற்றை அருள் பாலியுங்கள்! அவர்களையும், யோகிகளாகவும், முனிவர்களாகவும் மாற்றுங்கள். பாரதத்தின் பெருமை மிக்க புத்திரர்களாக அவர்களை விளங்கச் செய்யுங்கள்.

## 19. பசுப் பாதுகாப்பு

இந்தியாவில் எல்லாவளங்களுக்கும் அன்னையாக பசு கருதப்படுகிறது. பல வேலைகளுக்குப் பயன்படும் காளைகளைப் பெற்றுத் தந்தும், பாலைக் கொடுத்தும் பசு உபயோகமாக இருக்கிறது. இந்த இரண்டு உபயோகங்கள் தவிர வயலுக்கு வேண்டிய உரம், அடுப்பு எரிக்க உதவும் சாணம் இவற்றையும் கொடுக்கிறது. பசு இறந்த பிறகும், அதன்

தோலும், எலும்பும் பயன்படுகின்றன. இப்படி பலவகையிலும் பசு உபயோகமாயிருப்பது அனை வரும் அறிந்ததே. பசுவைப் பாதுகாப்பது சிறந்த வேள்வியாகக் கருதப்படுகிறது. மேலும் பசு, வீட்டு மிருகங்களில் மிகப் புனிதமானதாகப் பேணப்படு கிறது. பசுவைப் பேணுவதினுல் இந்த நாட்டு குடிமக்களின் ஆரோக்கியம், சக்தி, அறிவு, பலம் ஆகியவைகள் வளரும்.

இந்தியாவில் இன்று பசுவைப் பேணுவது என்பது, அவற்றைக் கசாப்புக் கடைகளிலிருந்து காப்பாற்றுவதோடு இன்னும் பல கடமைகள் உள்ளடங்கியுள்ளன. பசுவின் மேல் அன்பு செலுத்தி அதைக் கவனிக்க வேண்டும். மக்களுக்கு உயிர் சக்தி, பலம் இவற்றை அளிக்கும் பாலை மிகுதியாக உற்பத்தி செய்யும் வகையில் பசுவை அனுதாபத்துடனும், அறிவு பூர்வமாகவும், பேண வேண்டும். எல்லா உயிர்களிடமும் உள்ள ஒருமைப்பாட்டையும் பசுவின் மேல் மதிப்பையும் மக்களிடையே வளர்க்க வேண்டும்.

இந்தியாவில் இன்று பசு உள்ள நலிந்த நிலையில், பசு வளர்ப்பு முறைகளும், பேணும் முறைகளும் பற்றிய அறிவை விரிவாகப் பரப்ப வேண்டியது மிக அவசியமாகிறது.

## அத்தியாயம் — மூன்று

## 20. இளைஞர் நலம்

என்னைப் பொறுத்தவரை, எல்லாப் பொதுநலப் பணிகளிலும் முதன்மையாகச் செய்ய வேண்டியது, கிராமங்களிலும், நகரங்களிலும் வாழும் நம் சகோதரர்களிடையே, இறைவனிடம் உண்மையான பக்தியை எழுச்சியுறச் செய்வதே. மக்களை மூடநம்பிக்கை உள்ளவர்களாகச் செய்ய வேண்டுமென்பது நிச்சயமாக இதன் பொருள் அல்ல. அனைவரையும் சகோதர சகோதரிகளாக நேசிக்கும் தன்னலமற்ற அன்பை வளர்க்க வேண்டும். ஆண்டவனை வழிபட்டு எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் சிருஷ்டியிடம் பக்தியை செலுத்த வேண்டும்.

இந்த அடிப்படை சரியாகவும், செம்மையாகவும் நிறுவப்பட்டுவிட்டால், மேலே கட்டிடம் எழுப்புவது மிகச் சுலபமான பணி என்று நான் நினைக்கிறேன். உதாரணமாக குற்றப் பிரச்னைகள் மறைந்துவிடும். சட்டம் ஒழுங்கை நிலைநாட்டுவது சுலபமான காரியமாகிவிடும். தான் ஏமாற்ற நினைக்கும் அல்லது ஏதாவது ஒருவகையில் தீங்கு செய்ய நினைக்கும் மனிதனிடமும், தான் வணங்கும் தெய்வம் உறைகிறது என்ற எண்ணம் மக்களுக்குப் படிப்படியாக ஏற்பட்டால், அவர்கள் தங்களுடைய தீய எண்ணங்களைத் தவிர்ப்பார்கள்.

இதை அடைவதற்கு, கிராமங்களில் உள்ள சமூகநல மன்றங்கள் அல்லது நகரங்களில் உள்ள வசதியான இடங்கள் இவைகளில் மக்கள் பெருவாரியாகக் கலந்துகொள்ளும் வகையில் அடிக்கடி முறையான கூட்டங்கள் நடத்துவது ஒன்றே

சிறந்த வழி என்று எனக்குப் படுகிறது. காந்திஜி அவர்களின் பிரார்த்தனைக் கூட்டம் என் நினைவுக்கு வருகிறது. ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் இதைப் பின்பற்றினால் என்ன? காந்திஜியின் பூத உடல் மறைந்து விட்டது. ஆனால் அவருடன் "பிரார்த்தனையும்" மறைய வேண்டுமென்ற அவசியமில்லையே! இப்பொழுதுகூட, இங்கே இந்த ஆசிரமத்திலும், நூற்றுக்கணக்கான தெய்வீக வாழ்க்கைச் சங்க மையங்களிலும், தினமும் மாலையில் உறுப்பினர்கள்கூடி, நாம சங்கீர்த்தனம் பாடுகிறார்கள். புனித நூல்களைப் படிக்கிறார்கள். ஆன்மீக விஷயங்களைப்பற்றி பேசுகிறார்கள்.

இளைஞர்கள் தீய வழிகளிலிருந்து விலக்கப் பட்டு, அறவழியிலே நடத்திச் செல்லப்பட வேண்டும். எல்லாவகை காம நூல்களும் தடை செய்யப்பட வேண்டும். அறவாழ்க்கையின் முக்கியத்துவம் விளக்கப்பட வேண்டும். இதே போன்று, திரைப்படங்கள் முதலியனவற்றில் உள்ள ஆபாசங்களும் நீக்கப்பட வேண்டும். ஒரு மாணவன் திரைப்படம் ஒன்றைப் பார்த்தால், அது அவனுக்கு அறிவூட்டுவதாகவும், ஆன்மீக எழுச்சி யளிப்பதாகவும் அமைய வேண்டும். ஆங்கிலத் திரைப்படங்களில் பெரும்பாலானவை, நேர் எதிர் மாறாக இருப்பதாக நான் அறிகிறேன். இந்தியப் படங்கள் பெரும்பாலானவை புராணப் படங்களாக இருப்பனவாகவும் நான் அறிகிறேன். இவற்றை ஒழுங்காகத் தணிக்கை செய்தால் அவை ஒரு வருக்கும் ஒரு தீங்கும் செய்யாது.

உடற்பயிற்சி, விளையாட்டு இவை இளம் தலை முறையினருக்கு மிக முக்கியமானவை. எல்லா சமூக நலத் திட்டங்களிலும் இவற்றிற்கு முக்கியமான இடம் அளிக்கப்பட வேண்டும்.

இளம் மாணவர்களிடையே யோகப் பயிற்சியை அளிப்பதில் உத்தரப்பிரதேச அரசு கவனம் செலுத்துகிறது என்பதை அறிய நான் மகிழ்ச்சி யடைகிறேன். ஆசனங்கள், பிராணுயாமம், சூரிய நமஸ்காரம் இவை இளம் மாணவ மாணவியருக்கு பெரும் நன்மை பயக்கும். இவைகளைப் பள்ளி களிலும், கல்லூரிகளிலும் படிப்படியாக அறிமுகப் படுத்த வேண்டும்.

இவைகள் பள்ளிக்கூடங்களில் மட்டும்தான் செய்யப்பட வேண்டுமென்பதில்லை. கிராம நல மையங்களில், கிராம மக்களுக்கும் ஆசனம் முதலிய வற்றில் பயிற்சி அளிக்கலாம். உடலில் உள்ள உறுப்புக்களை, (அதிலும் முக்கியமாக உள்ளுறுப் புக்களை) மிகத் திறமையாகவும், முழுமையாகவும் வளர்க்க யோகப் பயிற்சிகளைத் தவிர வேறு முறைகள் இல்லை.

சுகாதாரத்தோடு வாழ வேண்டும் என்ற விழிப்புணர்ச்சியைத் தட்டி எழுப்ப வேண்டிய வழி வகைகளை கிராமங்களில் போதிக்க வேண்டும். கடவுள் நம்பிக்கையையும், அண்டை அயலாரிடம் அன்பு கொள்ள வேண்டும் என்பதையும் கிராம மக்களின் மனதில் வேரூன்றச் செய்ய வேண்டும். தனது உடலை சுத்தமாகவும், ஆரோக்கியமாகவும் வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணமும், ஆரோக்கிய பழக்க வழக்கங்களும் இயற்கை யாகவே அவர்களுக்கு வந்து அமையும்.

## 21. இந்தியாவில் கல்விச் சீரமைப்பு

பண்டைக்காலத்தில் இந்தியா உலக முழுவ தற்கும் ஆசாணுக விளங்கியது. யோகமும், ஆன்மீகமும் அதன் உயிர் மூச்சாக விளங்கின.

அதுதான் நமது பாரம்பரியம். இந்திய நாட்டு மக்களின் குறைபாட்டினுல், மேலே நாட்டு விஞ்ஞானம் அல்லது உலகாயத எண்ணங்கள் மெதுவாகப் பரவுகின்றன. பாரத நாட்டின் பெருமையை, உலகாயத அல்லது விஞ்ஞான விஷயங்கள் மாசுப்படுத்தி, நிறமாற்றம் செய்ய முயலும் பொழுது இந்திய நாட்டின் ஆன்மீகப் பின்னணி, அதை நிலேயாக எதிர்த்து போர்க்கொடி உயர்த்தியுள்ளது. இருந்தபொழுதிலும், மேலே நாட்டு நாகரீகம் என்ற பெயரில் ஏற்கனவே விஞ்ஞானம் செய்துள்ள நாசம் மிகப்பெரியது.

பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இளேஞர்களின் மனத்தில் ஆரோக்கியமான கருத்துக்களேப் புகுத்தி அவர்களே உண்மையான மனிதர்களாக மாற்றக்கூடிய ஆன்மீக அல்லது மத சம்பந்தமான பாடங்களே சேர்த்துக் கொள்வது தலேயாய பணி. உண்மையான மதம் உலகளாவிய தன்மையது என்பது என் கருத்து. இதைப்பற்றி கருத்து வேறுபாட்டிற்கு இடமேயில்லே. சித்தாந்தம், சடங்குகள் இவற்றில் உள்ள வேறுபாடுகள் கூட இல்லே. எல்லா தீர்க்கதரிசிகளும் வெளிப்படுத்திய உண்மை ஒன்றே. ஒவ்வொரு மதத்தையும் சுற்றி வெறுப்பின் அடிப்படையில் வளர்ந்துள்ள காளான்கள், சூரியனே கிரஹணம் பிடித்து மறைப்பதுபோல்தான், எல்லா மதக்கலவரங்களும், மோதல்களும் ஏற்படுகின்றன.

இளேஞன் ஒருவனுக்கு, உலகத்திலுள்ள அத்தனே மக்களும் அவனுடைய உடன் பிறந்தவர்கள் என்ற எண்ணத்தை ஊட்டவேண்டும். புழு, பூச்சி, பறவை, மிருகங்கள் இவைகளுடைய ஆன்மாவும், அவன் உள் உறையும் ஆன்மாவும்

உண்மையில் ஒன்றே. இந்தத் தத்துவத்தைக் கற்பித்தால், நாம் இணக்கம், சாந்தி, சகோதரத்துவம் இவற்றிற்கான விதைகளைப் பயனுள்ள வகையில் விதைத்தவர்களாகிறோம்.

தன்னலமற்ற சேவையே உண்மையான மதம். ஆண்டவனின் படைப்புக்காக வாழும் வாழ்க்கையே தெய்வீக வாழ்க்கை. தன்னலமற்ற சேவை ஒவ்வொரு இந்தியனின் ஒவ்வொரு நாடி நரம்பிலும் பரவியிருக்க வேண்டும்.

தன்னலமற்ற குறிக்கோள், ஒரு ஆணைவிடப் பெண்ணிற்கு சீக்கிரமாகவும், சுலபமாகவும் ஏற்புடையதாக அமைகிறது. பெண்களிடம் தன்னலமற்ற சேவையும், ஆன்மீகமும் இயற்கையாகவே மிஞ்சி இருக்கின்றன. அன்பு, கருணை, பொறுமை, அனுதாபம், பிறரைப் புரிந்து கொள்ளும் பரிவு முதலிய தெய்வீக சம்பத்துக்கள் பலவும், பிறப்பிலிருந்தே பெண்களிடம் இருக்கிறது. இந்தியப் பெண்கள் அடக்கமாகவும், தற்பெருமை அற்றவர்களாகவும் உளர். எனவேதான் காந்திஜி உள்பட எல்லா மகான்களும், பெண்களைப்பற்றி வெகு உயர்வாகப் பேசியுள்ளனர்.

பள்ளிகளில், மத சம்பந்தமான கல்வி அளிப்பதற்குச் சட்டம் இடம் கொடுக்கவில்லை என்றால், அக்கல்வியைப் பாட நேரத்திற்குப் பிறகு கற்பிக்க வேண்டும். நன்கு படித்த இரண்டொரு ஆசிரியர்களின் மேற்பார்வையில், தினந்தோறும் கீதை வகுப்புகள் நடைபெற வேண்டும். அப்பொழுது மாணவர்கள் தாங்களாகவே கீதையைக் கற்றுக் கொள்வார்கள். கீதையில் ஆன்மீகத்தின் சாரம் அடங்கியுள்ளது. மேலும், கீதை ஒரு உலகப் பொது மறையாகப் போற்றப்படுகிறது.

காந்தியத் திட்டத்தின்படி நடைபெறும் நிர்மாணத் திட்டங்களில் மாணவர்கள் பங் கெடுத்துக் கொள்ள ஊக்குவிக்கப்பட வேண்டும். மாணவர்கள், ஞாயிற்றுக்கிழமைகளில் அருகே உள்ள கிராமங்களுக்குச் சென்று, கிராம மக்களுக்கு சுகாதாரம், ஆரோக்கியம் முதலியவற்றைப் பற்றிய விதி முறைகளைக் கூற வேண்டும். மேலும் தங்களுடைய நடவடிக்கையால் இந்த விதி முறைகளை நடை முறையில் காட்ட வேண்டும். என்றும் இப்படிப்பட்ட சேவைகளை ஏழை மக்களுக்குச் செய்ய வேண்டும். வைத்தியக் கல்லூரி மாணவர்கள் நோயினால் அவதியுறும் மக்களுக்கு மருத்துவ உதவியும் செய்ய வேண்டும்.

நான் எப்பொழுதுமே, தனி நபரின் மேம் பாட்டிற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கிறேன். தனி மனிதன் திருந்தினால் தானாகவே முழு தேசமும் திருந்திவிடும். ஒவ்வொரு மாணவனும் கீதையின் உபதேசத்தை தன்னகத்தே பெற்றிருக்க வேண்டும். ஒவ்வொரு ஆணும், பெண்ணும் முழுமை பெறட்டும்.

இப்படி நிகழ்ந்தால், நம்மைப் பெற்று வளர்க்கும் நமது தாய், தனது குழந்தைகளைப் பற்றி பெருமைப்படுவாள். நாம் இந்தியத் தாயின் குழந்தைகளிடம் அன்பு, தன்னலமற்ற சேவை யுணர்வு, இணக்கம், சகோதரத்துவம் இவற்றைப் புகட்டினால் மட்டும் போதும். இது மிகப் பெரிய பணி. ஆண்டவன் நமக்கு பக்க பலமாக இருக் கிறார். அவர் விருப்பம் போல் நடக்கும்.

## 22. கல்வியும், தேசீய புனர்நிர்மாணமும்

ரிஷிகளும், முனிவர்களும் நிறைந்த நாடு இந்தியா.. மக்களிடையே படிப்பின்மை பரவலாக

உள்ளது. விடுமுறை நாட்களில் பேராசிரியர்கள், ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் கிராமங்களுக்குச் சென்று பொது மக்களுக்குக் கல்வியறிவு புகட்ட வேண்டும். அவர்கள் இரவுப் பள்ளிக்கூடங்களுக்கு ஏற்பாடு செய்து பொது மக்களுக்கு கல்வி புகட்ட வேண்டும். இந்தியாவை, ஐரோப்பாவுடனோ அல்லது அமெரிக்காவுடனோ ஒப்பிட்டுப் பாருங்கள். எந்த நாகரிக தேசத்திலும் இருப்பதைவிட அதிக மாகப் படிப்பறிவு அற்றவர்கள் இந்தியாவில்தான் உளர்.

ஆண்களுக்கும், பெண்களுக்கும், தேசீயப் பள்ளிகளும், கல்லூரிகளும் ஏற்படுத்தப்பட வேண்டும். ஆணுக்கும், பெண்ணிற்கும் நல்ல விதமான கல்வி புகட்டப்பட வேண்டும். அப் பொழுதுதான் தேசீய உணர்ச்சி நிலைத்திருக்கும். எந்தக் கல்வி முறை ஒருவனை உண்மை வழியிலும், அறநெறியிலும் நடக்கும்படிச் செய்கிறதோ அந்தக் கல்வி முறைதான் உண்மையான கல்வி முறை.

தேசத்தின் எல்லாப் பகுதிகளிலும், சேவா தளங்கள், சமிதிகள், உடற் பயிற்சி நிலையங்கள் அமைக்கப்பட வேண்டும். அவைகள் நன்றாக நிறுவப்பட வேண்டும். இந்த நிறுவனங்கள் மூலம் முழு மனதுடன் சேவை செய்வது உங்கள் கடமை. உங்களுக்கு உண்மையான உணர்வு உண்டாகும். விரைவிலேயே உங்கள் இதயம் தூய்மை அடையும்.

பல்வேறு வகுப்பினரையும், தனிப்பட்ட நபர் களையும் தன்னகத்தே கொண்டுள்ளதுதான் ஒரு சமுதாயம் அல்லது தேசம். ஒவ்வொரு தனிப்பட்ட நபரும் தனது கடமையை செவ்வனே செய்ய

வேண்டும். தனது கடமையை ஆற்ற அவன் ஆற்றல் உள்ளவனுகவும், ஆரோக்கியமான வனுகவும் இருக்க வேண்டும். இல்லையென்முல், சமூகமோ, தேசமோ வலுவிழந்து மாய்ந்துவிடும். ''வெறும் ஆர்வம்'' மட்டும் போதாது. அதனுல் பயன் ஒன்றும் இல்லை. உண்மையான அன்பு உங்களிடம் ஆழமாகப் பதிந்திருக்க வேண்டும். உங்கள் ஒவ்வொரு நாடி, நரம்பும் தூய்மையான அன்பில் தழைக்க வேண்டும். இந்தப் பண்பு உங்களிடம் இல்லை என்முல், மனித குலத்திற்கு சேவை செய்வதன் மூலம் அதை மிகுதியாகப் பெருக்கிக் கொள்ள வேண்டும். மதத்திற்காக உயிரைவிட்ட மாபெரும் முனிவர்களையும், மகான் களையும் பற்றிய சரித்திரத்தை மீண்டும் மீண்டும் படியுங்கள். ஒரு குருவின் கீழ் சில காலம் பணியாற்றுங்கள். அவருக்குச் சேவை செய்யுங்கள், அவரை மதித்து, அவருக்குக் கீழ்ப்படியுங்கள். கீழ்ப்படிதல் என்பது தியாகத்தைவிடச் சிறந்தது. அவருடைய தியாக உணர்வும், நற்பண்புகளும் உங்களுக்கும் வரும். சேவை செய்யக் கற்றுக் கொள்ளுங்கள். தேசத்திற்கும், மதத்திற்கும், உங்களால் உண்மையான சேவை செய்ய முடியும்.

உலகின் தேவை நல்ல ஆரோக்கியமான தாய் மார்களும், ஆரோக்கியமான வலிமையுள்ள பையன்களும், பெண்களும். இன்று இந்தியாவில் நாம் காண்பது என்ன? பீஷ்மர், பீமன், அர்ச்சுனன், துரோணர், அஸ்வத்தாமன், கிருபர், பரசுராமர் மற்றும் எண்ணிலடங்கா வீரப் பண்பாளர்கள் தோன்றிய நாடு இந்த நாடு. ஒப்பற்ற வீர ராஜபுத்திரத் தலைவர்கள் தோன்றிய இந்த பூமியில் இன்று பலமற்ற பேடிகள் மலிந்திருக் கின்றனர். ஆரோக்கிய விதிகள் அலக்ஷியம் செய்யப்பட்டு, கைவிடப்படுகின்றன. தேசம்

கஷ்டப்படுகிறது, அழிகிறது. அஹிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், ஒழுக்கம் என்ற ஐந்து நற்பண்புகளையும் பெற்ற தைரியமான ஒழுக்கம் நிறைந்த பல ஆன்மீக வீரர்கள் இன்று உலகிற்குத் தேவை. நற்பண்பாளர்களால்தான் உண்மையான சுதந்திரத்தைப் பெற்றுத்தர முடியும்.

கைம் பெண்கள், அனாதைகள், பசுக்கள் இவைகள் காப்பாற்றப்பட வேண்டும். நமது இளம் பட்டதாரிகள், தொழில்துறை, விவசாயத்துறை இவற்றைப் புறக்கணிக்கக்கூடாது. அவர்கள் தங்கள் நிலங்களைப் பயிர் செய்து உற்பத்தி சக்தியை அதிகரிக்க வேண்டும். இந்தத் துறையில் வேலை செய்ய நிறைய வாய்ப்புக்கள் உள்ளன. கலப்படமற்ற நல்ல தரமான பால், வெண்ணெய், முதலியனவற்றை உற்பத்தி செய்து மக்களுக்கு அளித்து பணம் நிறைய சம்பாதிக்கலாம்.

சுதேசிப் பொருள்களை உபயோகித்து, தொழில் வளர்ச்சிக்கு உதவி செய்யுங்கள். இதனால் பொருளார சுதந்திரம் கிடைக்கும். பொருளாதார சுதந்திரம் இன்றியமையாதது.

## 23. பண்பாட்டுக் கல்வியின் தேவை

வருங்கால பிரஜைகளாகவும், நாட்டின் பெருமையின் நம்பிக்கை நக்ஷத்திரங்களாகவும் விளங்கும் மாணவர்களுக்கு உண்மையான கல்வி அளிக்க வேண்டியது இப்பொழுதைய தேவை. ''மனிதனிடம் உள்ளுறையும் தெய்வத் தன்மையை வெளிப்படுத்தும் வழிமுறைகளைக் காண்பதே கல்வி. அகங்காரத்தையும், தன்னலத் தையும் விருத்தி செய்யாமல், உலகம் தழுவிய

ஆன்மீக உணர்வை ஏற்படுத்துவது என்று இதற்குப் பொருள். கல்விமுறை, வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும், முழுமையடைய மாணவர்களைத் தயார் செய்ய வேண்டும். மனித குலத்திற்கு ஞானம் அளிப்பதும், மனிதனிடமுள்ள கீழான இயல்புகளை அகற்றுவதும், சமூக அமைப்பை மேம்படுத்துவதும் உண்மையான கல்வி முறையின் குறிக்கோளாகும். அன்பு, சேவை, ஞானம் முதலியவற்றில் முழுமையான வளர்ச்சிதான் உண்மைக் கல்வி முறையின் உரைகல். அதுவே உண்மைக் கல்வி.

கல்விமையங்களில் நன்னடத்தை உடைய மாணவர்களால் மட்டுமே உலக சமாதானம், இணக்கம், சகோதரத்துவம் இவற்றை அளிக்க முடியும். அறிவியல் முறைப்படி அமைந்த சீரிய கல்விமுறை மூலம் பண்படுத்தப்பட்ட மாணவர் களால்தான் வளமான தேசத்தை நிர்மாணிக்கவும், மனித சமுதாயம் முழுமையும் ஆன்மீக எழுச்சி பெறுவதையும் விரைவுபடுத்த முடியும்.

கல்வி மையங்கள், தலைவர்கள், ராஜ தந்திரிகள், விஞ்ஞானிகள், ராணுவ வீரர்கள், அரசியல் வாதிகள் மற்றும் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையில் வல்லுநர்கள் இவர்களை உருவாக்க வேண்டும். மேலும் மகான்களையும், முனிவர் களையும், தத்துவ மேதைகளையும், மகரிஷிகளையும் உருவாகும்படி செய்ய வேண்டும். தற்காலக் கல்வி முறை பாட திட்டத்தில் முழுமையான மாற்றங்கள் செய்ய வேண்டியது உடனடியான அவசியமாகும்.

தியாக உணர்ச்சி, தன்னடக்கம், தூய்மை இவைகளை மாணவர்கள் கற்றுக்கொள்ளும் வகையில் நன்கு எழுதப்பட்ட புத்தகங்கள்

பரிந்துரை செய்யப்பட வேண்டும். உயர்ந்த ஒழுக்கப் பண்பு, சத்தியம், தூய்மை, கல்வியறிவு, ஞானம், பண்பாடு, சமய அறிவு, தியாக உணர்வு, தன்னலமறுப்பு, நன்நடத்தை வலிவு, திடச்சித்தம் இவற்றை நம் மாணவச் செல்வங்கள் பெறுவார்களாக!

## 24. கல்லூரி முதல்வர்களுக்கும், தலைமை ஆசிரியர்களுக்கும்.

இருண்ட நாத்திக, உலகாயத சக்திகளின் ஆளுகைக்கு உட்பட்டு தற்கால மாணவர்களில் பெரும்பான்மையோர், மத நம்பிக்கையற்றவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களிடம் அறநெறிப் பண்பாடு இல்லை. நல்வாழ்க்கை, பிரம்மச்சரியம் இவற்றைப்பற்றிய உண்மை அறிவு அவர்களுக்கு இல்லை. எனவே, வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கும் பொழுது அவர்கள் மிக்க துன்பம் அடைகிறார்கள்.

மாணவர்களின் நடத்தையை உருவாக்குவது, அறவழியில் நடக்க அவர்களுக்குப் பயிற்சி அளிப்பது என்ற சிரமமான பெரும் கடமைகள். ஆசிரியர்களுக்கும் பேராசிரியர்களுக்கும் இருக்கிறது. ஆசிரியப் பெருமக்கள் அறநெறியில் நிறைவு பெற்றவர்களாக முதற்கண் அமைய வேண்டும். இல்லையென்றால் குருடன் குருடனுக்கு விழி காட்டுவது போன்று அமையும்.

ஆசிரியர் பணியைத் தேர்ந்து எடுப்பதற்கு முன், நீங்கள் கல்வித் துறையில் உங்களுடைய நிலைமைக்கு உரிய உயர்ந்த கடமையை உணர வேண்டும். வகுப்பறையில் சுவையற்ற பிரசங்கங்களை செய்யும் புத்திசாலித்தனமும்,

திறமையும் மட்டும் போதாது. இது மட்டும் ஒரு பேராசிரியருக்கோ, ஆசிரியருக்கோ அணிகலனாகாது.

உலகத்தின் வருங்கால மாணவர்களைச் சரியாக உருவாக்குவதின் மூலம் நீங்கள் மிகச் சிறந்த சேவை செய்கிறீர்கள். இதுவே நீங்கள் செய்யும் சிறந்த யோகமாக அமைகிறது.

சில மத சம்பந்தமான நூல்களை மாணவர்கள் கட்டாயம் பயில வேண்டும் என்று நீங்கள் அறிமுகப் படுத்தினால், நீங்கள் அவர்களுக்கு மிக்க நன்மை செய்தவர்களாவீர்கள். அப்படிச் செய்தால், இளைஞர்களிடையே அறநெறி மற்றும் ஆன்மீக மறு மலர்ச்சியை ஏற்படுத்துவீர்கள்.

பிரம்மச்சரியத்தின் முக்கியத்துவத்தையும், ஒழுக்க நெறி அற்ற வாழ்க்கையினால் ஏற்படும் கேடுகளையும், மாணவர்களுக்கு விளக்க வேண்டியதும், அவர்கள் அகத்தே மறைந்திருக்கும், முக்கியமான வீரியத்தை, ஆன்மீக சக்தியை, காப்பாற்றும் பல வழிவகைகளை அவர்களுக்குக் கற்பிப்பதும் ஆசிரியர்களின் கடமையாகும்.

இந்த உலகில் வருங்கால விதி உங்கள் கையிலும், உங்கள் மாணவர் கையிலும் உள்ளது. நீங்கள் அவர்களைச் செம்மையான அறநெறியில் செல்லப் பயிற்சியளித்தால், சமாதானம், ஆனந்தம், மகிழ்ச்சி இவைகளை எங்கும் பரப்பும் அறிவுச் சுடர்களான, சிறந்த பிரஜைகளாலும், யோகிகளாலும், ஜீவன் முக்தர்களாலும், இவ்வுலகம் நிரப்பப்படும்.

ஆசிரியர்களே! பேராசிரியர்களே! எழுமின்! மாணவர்களுக்கு பிரம்மச்சரியம், அறநெறி,

ஒழுக்கநெறி இவற்றைப் பின்பற்றிச் செல்லப் பயிற்சியளியுங்கள். இந்த தெய்வீகப் பணியை உதாசீனம் செய்யாதீர்கள். இந்தக் கடினமான பணிக்கு நீங்கள் தார்மீகப் பொறுப்பு ஏற்க வேண்டும். வேதாந்தம், தத்துவம், பக்தி, யோகம் பற்றிய சில மத சம்பந்தமான நூல்களை அவர்கள் படிக்கட்டும். கீதை, ராமாயணம், பாகவதம் முதலிய புனித நூல்களை அவர்களுக்குப் போதியுங்கள். பண்டைக்கால ரிஷிகளும், முனிவர்களும் கண்டறிந்த நுண்ணிய உண்மைகளை அவர்கள் கற்கட்டும். இந்தப்பணியை முழுமனதுடன் நீங்கள் மேற்கொண்டால் உங்களுக்கு ஆன்ம ஞானம் ஏற்படும். உண்மையாகவும், நேர்மையாகவும் இருங்கள்.

தனது மாணவர்களை உண்மையான பிரம்மச் சாரிகளாக விளங்க உண்மையாக முயற்சி செய்யும் ஆசிரியர் பாக்கியவான். உண்மையான பிரம்மச் சாரியாக விளங்க முயற்சி செய்யும் மாணவன் இருமுறை ஆசீர்வதிக்கப்பட்டவன் ஆகிறான். ஆண்டவன் இவர்களை ஆசீர்வதிக்கட்டும்! இத்தகைய ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் புகழ் ஓங்கட்டும்!

## வெளி நாட்டிலுள்ள இந்திய மாணவர்களுக்கு

இந்திய நாட்டின் பெரிய பாரம்பரியப் பண்பாட்டிற்கு மிகச் சிறந்த தூதுவர்களாக நீங்கள் விளங்குகிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்கள் பொறுப்புக்கள் அதிகம். இந்தப் பொறுப்புதான் என்னை புனித கங்கையின் கரையில் அமைந்துள்ள இந்த இமயமலை வாசஸ்தலத்திலிருந்து உங்களுக்கு இச்செய்தியை அனுப்பத் தூண்டுகிறது.

உங்களுடைய இன்றைய பிரச்சனையை நீங்கள் கவனமாகப் பரிசீலித்தால், நாம் எத்தனை கடினமான, ஆபத்தான கால கட்டத்தைக் கடந்து கொண்டிருக்கிறோம் என்பதை உணர்வீர்கள். விரைவிலேயே நீங்கள் இந்தப் பிரச்சனையின் சுமையை முதிய தலைமுறையினரிடமிருந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். உங்கள் பணிகள் பலதரப் பட்டவையாகவும், பெரும் பணிகளாகவும் உள்ளன. சகிப்புத்தன்மை, உண்மை, அன்பு இவற்றை அறவே இழந்துள்ள மனித வர்க்கத்தை வழி நடத்திச் செல்ல, உண்மையான, புனிதமான, இந்தியக் கலாச்சாரத்தை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது. தெய்வீக வாழ்க்கையாகிய சமாதானம், சத்தியம், அன்பு இவற்றைப் பரப்பும் பெரும் பட்டாளத்தின் முன்னணி வீரர்களாக நீங்கள் திகழ்கிறீர்கள். உண்மையான தெய்வீக வாழ்க்கைப் பண்புகளை உங்கள் அன்றாட வாழ்க்கையின் அம்சங்களாகச் செய்ய நீங்கள் கற்றுக் கொள்ளும் பொழுதுதான், இந்தப் பணியில் நீங்கள் வெற்றி பெறுவீர்கள். எனவே, அறநெறி ஆன்மீக ஞானத்தால் உங்களுக்கு நீங்களே புத்துயிர் அளித்துக் கொள்ளுங்கள். உங்களைச் சுற்றியுள்ள அனைவருக்கும் நன்மையும், சேவையும் செய்வதற்காக வாழுங்கள். அன்பு, சகிப்புத்தன்மை, ஒருவரோடொருவர் இணக்கம் இவைகளைக் கொண்ட தெய்வீக வாழ்க்கையை எப்படி வாழவேண்டும் என்பதை அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் உங்கள் வாழ்க்கையே ஒரு உதாரணமாக இருக்கும்படி வாழ்ந்து காட்டுங்கள்.

வெகு தூரத்திலுள்ள வெளிநாடுகள் பலவற்றில், அவர்களுடைய சிறந்த பண்பாட்டையும், அவர்களின் நல்லியல்புகளையும், அவர்

களிடம் உள்ள நற்குணங்களையும், வாழ்க்கையில் பல துறைகளில் அவர்கள் பெற்றுள்ள திறமை களையும் கண்டு அறிந்து கொள்ள நீங்கள் நெடுந் தூரம் பயணம் செய்திருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் பிறரிடமிருந்து, ஒரு விஷயத்தைக் கற்றுக் கொள்ள விரும்பினால், அதற்கு மாறாக நீங்கள் அவர்களுக்கு ஏதாவது அளிக்க வேண்டும் என்பது மரபு. நீங்கள் பிரதிபலனாக அளிக்க உங்களுடைய பாரம்பரிய பண்பாடு என்ற இரத்தினத்தைவிடச் சிறந்ததொன்று கிடையாது. மதங்களுக்கும், பண்பாடுகளுக்கும் அடிப்படையான உண்மைகள் இறுதியில் ஒன்றாகவே இருக்கின்றன. ஏனெனில் உண்மை ஒன்றே! இனங்கள், ஜாதிகள், குணங்கள், இவைகள் பலவாக இருப்பதால், உண்மையை நெருங்கக்கூடிய வழிவகைகளும் பலவாக இருப்பது இயல்பு. தனிப்பட்ட நபர்களின் முன்னேற்றத்தின் பல்வேறு மட்டங்களுக்கு ஏற்புடையதாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் பல வழி வகைகள் இருக்கின்றன. இந்தப் பல்வேறு வழி களின் அடிப்படையில் முரண்பாடு இருக்காது. ஏனென்றால் இவைகள் எல்லாம் ஒரே பொருளை நோக்கியே செல்கின்றன. எனவே, உங்கள் மனதில் ஜாதி உணர்வு எள்ளளவும் இருக்க வேண்டாம். நாகரீக உலகில், மதவெறிக்கோ, ஜாதி உணர்வுக்கோ இடமில்லை. இவைகளுக்குப் பகுத் தறிவில் இடமில்லை.

நீங்கள் வருங்கால பிரஜைகளாக விளங்குவ தால், நமது தாயகத்தின் நம்பிக்கை, வளம், புகழ் அத்தனையும் உங்கள் கையில் இருக்கின்றன என்பதை நான் மிக அழுத்தமாக மீண்டும் சொல்ல விழைகிறேன். மிகவும் கவர்ச்சிகரமானதாகவும், புகழ் வாய்ந்ததாகவும் உள்ள இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள தகுதிவாய்ந்தவர்களாகுங்கள்.

இந்தியத் தனிச் சிறப்பின் உண்மையான பண்பு உருவங்களாகவும், நம்பிக்கையான பிரதிநிதி களாகவும் இருக்க முயற்சி செய்யுங்கள். உங்களுடைய அன்றாட நடவடிக்கைகள் இந்திய நாட்டின் உயர்ந்த குறிக்கோள்களுக்கு ஏற்ப அமையட்டும். அப்பொழுதுதான் நீங்கள் ஒவ் வொருவரும் இந்தியத் திருநாட்டின் உண்மையான சிறப்பை, நடைமுறையில் செயலாற்றும் பெருமை மிகுந்த செயல்வீரர்களாக விளங்குவீர்கள்.

ஒருவரை ஒருவர் வெறுப்பதோ, பலாத் காரத்தில் ஈடுபடுவதோ நமது மரபுக்கு உகந்தது அல்ல என்பதை உங்களுக்கு நான் நினைவு கூற விழைகிறேன். நமது அக்கம் பக்கத்திலுள்ள தேசங் களுடனும், உலகிலுள்ள மற்ற எல்லா தேசங் களுடனும் அமைதியாக வாழ நாம் விரும்புகிறோம். பரஸ்பரம் புரிந்து கொள்ளுதல், நல்லெண்ணம் இவற்றின் அடிப்படையில் அமைந்த நமது குறிக்கோள் ஒன்றே! சத்தியம், அஹிம்சை, சமாதானம், இவற்றின் தூதுவராக யாண்டும் இந்தியா விளங்கி வருகிறது. இந்தியாவின் பல்லாண்டுகால சிறந்த பாரம்பரியம் சமீபகால துரதிருஷ்டவசமான வகுப்புக் கலவரங்கள் என்ற கிரஹணத்தால் பீடிக்கப்பட்டிருந்த பொழுதிலும், இந்தியாவால் இந்தப் பாரம்பரியத்தை எப்படி மறக்க முடியும்? ஆனால் இந்தக் கலவரங்கள் இப் பொழுது கடந்தகால விஷயங்களாகிவிட்டன. வெறுப்பை வெறுப்பால் வெற்றிகொள்ள முடியாது. அன்பினால்தான் வெற்றி கொள்ள முடியும். இதை எப்பொழுதும் நினைவில் கொள்ளுங்கள். உங்க ளுடைய ஒவ்வொரு செயலும், உங்களுடைய கடந்தகால அனுபவங்கள், பாடங்கள், அவை களின் போதனைகள் இவற்றால் வழிநடத்தப் படட்டும்.

நாம் ஒற்றுமையை விழைகிறோம். குறுகிய, பிராந்திய, பாரபட்சமுள்ள ஒற்றுமையை அல்ல. உண்மையான, யாண்டும் நிலைத்திருக்கும் புவனம் தழுவிய ஒற்றுமையை விழைகிறோம். நீங்கள் ஏதாவது காரியத்தை, வெற்றிகரமாக முடிக்க நினைத்தால் ஒரு பலமான, ஒற்றுமையான அமைப்பு உங்களுக்குத் தேவை என்பது வெளிப் படை. அப்பொழுதுதான் கணிசமான வெற்றி கிடைக்கும். நீங்கள் எப்பொழுதாவது சிறிய மழைத்துளியைப் பார்த்திருக்கிறீர்களா? அது ஒருபொழுதும் தனிமையாக பயணம் செய்வதில்லை. அப்படி எப்பொழுதாவது தனி மழைத்துளி பயணம் செய்தால், பூமியை அடைவதற்குமுன் மகத்தான சக்தி வாய்ந்த சூரிய ஒளியினால் அது விழுங்கப்பட்டுவிடும். ஆனால் மழைத்துளிகள் தாரை தாரையாகப் பொழியும்பொழுது, எந்த சக்தியினாலும் அவற்றின் வலிமையைக் கட்டுப் படுத்த முடியாது. எவ்வளவு மகத்தான சக்தி! அதேபோன்று நீங்கள் ஒற்றுமையாக இருந்தால், உங்கள் முயற்சிகளில் நீங்கள் வெற்றியடைவதை இப்புவியில் உள்ள எந்த சக்தியாலும் நிறுத்த முடியாது. உங்கள் சாதனைகளை எந்த வலிமை யாலும் தடுக்க முடியாது. எனவே, புவனம் தழுவிய ஒற்றுமையையும், நமது பாரம்பரிய சகிப்புத் தன்மையையும் உள்ளத்தே கொண்டு, அவை உங்களுடைய ஒவ்வொரு செயலிலும் வெளிப்படும்படி பணிபுரியுங்கள். உலகத்திலுள்ள தேசங்களிடையே பரஸ்பர இணக்கம், நல்லெண்ணம், அமைதி இவற்றை ஏற்படுத்தும் இந்தப் பெரும் பணியில் கடுமையாக ஈடுபடுங்கள்.

எல்லாம் வல்ல இறைவனின் ஆசீர்வாதம் உங்கள் அனைவருக்கும் கிடைப்பதாக. உங்களுடைய எல்லா முயற்சிகளிலும், அவன் உங்களை ஊக்குவித்து வழிநடத்துவானாக.

## அத்தியாயம் நான்கு

# ஒழுக்க நெறிகள்
# இல்லறம் மற்றும் தொழில்துறை

## 26. குடும்ப ஒழுக்க நியதிகள்
## வீட்டில் யோகப் பயிற்சி

கணவன் மனைவியிடையே மத ஒற்றுமை இல்லாத பொழுது, சில சமயங்களில் வீடு நரகமாகிறது. கணவன் சமயப் பற்றுள்ளவனாக இருந்து, மனைவி சமயப்பற்று அற்று இருந்தால், அவள் தன் கணவனை சமயப் புத்தகங்களைப் படிக்கவோ, தியானம் செய்யவோ, புனித இடங்களுக்கு யாத்திரை செல்லவோ, மகாத்மாக்களுடன் சத்சங்கம் வைத்துக் கொள்ளவோ அனுமதிப்பதில்லை. கணவன் சந்நியாசி ஆக மாட்டேன் என்று எத்தனை முறை அடித்துக் கூறினாலும், எங்கே அவன் சந்நியாசியாகி விடுவானோ என்று மனைவிக்குப் பயம். இல்லத்தில் கணவனுக்கும் மனைவிக்கும் இடைவிடாத சண்டை. கணவன் கை நிறைய சம்பாதித்தும், வேண்டிய வசதிகளைப் பெற்றிருந்தும், அவனுக்கு மன நிம்மதி இல்லை.

மனைவிக்கு சமய நெறியில் பயிற்சி அளிப்பது கணவனின் கடமை. அவளும் சிறிது ஜபம், கீர்த்தனை செய்ய வேண்டும். ராமாயணம், பாகவதம், மஹா பாரதம் போன்ற சமய நூல்களை அவள் படிக்க வேண்டும். உபவாச விரதங்கள் அவ்வப்பொழுது இருக்க வேண்டும். கணவன், மனைவியை தீர்த்த யாத்திரைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். மகாத்மாக்களின் கதாகாலக்ஷேபம்,

பிரவசனம் முதலியவற்றிற்கு அழைத்துச் செல்ல வேண்டும். கணவனின் சமய, மற்றும் யோகப் பயிற்சிகளுக்கு மனைவி உதவ வேண்டும். அப்பொழுதுதான் வீடு ஆசீர்வதிக்கப்பட்ட இல்லமாகத் திகழும்.

மனைவியின் மோசமான நடத்தையினாலும், தங்கள் வீடுகளில் யோக சாதனைக்கு அவர்கள் இடையூறு செய்ததினாலும், சிலர் சந்நியாசம் மேற்கொண்டுள்ளனர். இந்த மனைவியர் தங்கள் கணவன்மார்களை யோகப் பயிற்சியைத் தொடர உதவி செய்திருப்பார்களேயானால் அந்தக் கணவன்மார்கள் தொடர்ந்து இல்லத்திலேயே இருந்திருப்பர். வீட்டிலே நல்லதொரு சமய நெறி வாழ்க்கை வாழ தங்கள் கணவன்மார்களுக்கு உதவி செய்வது புத்திசாலிப் பெண்களின் கடமையாகும். அப்பொழுதான், அவர்கள் இருவருக்கும் அமைதியான, சந்தோஷமான இல்வாழ்க்கை அமையும். புனித நூல்கள் கூறுவதாவது: ''சமயமற்ற இல்லம் மாளிகையானாலும் மயானமே''.

மனைவியின் சமயப் பயிற்சிகளில் கணவன் தலையிடக்கூடாது. அவளுடைய ஆன்மீக பரிணாமத்திற்கும், தூய்மையான வாழ்க்கைக்கும், அவன் எல்லா வகையிலும் முடிந்த வரை உதவ வேண்டும்.

கணவன் மனைவியிடையே ஆன்மீக ஒற்றுமை நிலவட்டும்! கணவன் மனைவிக்கும், மனைவி கணவனுக்கும், சமய யோகப் பயிற்சிகளில் உதவட்டும்! கடவுளை உணர்வதே உங்கள் கோட்பாடாக விளங்கட்டும்! தர்மம் உங்களை வழி நடத்திச் செல்லட்டும்!

## கணவனும், மனைவியும்

ஒருவரையொருவர் புரிந்து கொள்ளாததாலும், கருத்து வேறுபாடுகளாலும் கணவன் மனைவி இடையே தினம் பூசல் ஏற்படுகிறது. கணவன் எல்லா வகையிலும் தன்னைச் சந்தோஷமாக வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், தான் சொன்னபடி கேட்க வேண்டும் என்றும் மனைவி நினைக்கிறாள். இது முடியுமா? எனவே சண்டையிடுகிறார்கள். ஆனால் ஒரு நாள் சில நேரங்கள் இருவரும் பேசாமல் இருப்பார்கள். கணவன் சுயக் கட்டுப்பாடு இல்லாத முன் கோபக்காரனாக இருந்தால், சில சமயங்களில் இவை அடிதடியில் கொண்டு விடுவதும் உண்டு. மனைவி திருமதி சாக்ரடிஸ் அல்லது திருமதி துக்காராம் (ஜிஜாபாய்) போன்று இருந்தால், விஷயம் நேர்மாறாக அமையும். கணவனின் தலையில் இடி முழக்கத்துடன் மழை பெய்யும்!

ஒரு இல்லறத்தானிடம் ''பிரம்மச்சாரி வாழ்க்கை சிறந்ததா? குடும்ப வாழ்க்கையா?'' என்று கேட்டால் ''குடும்ப வாழ்க்கையே ஒண்டிக் கட்டை வாழ்க்கையைவிட ஆயிரம் மடங்கு சிறந்தது'' என்று அடித்துக் கூறுவான். தனது கருத்துக்கு ஆதரவாக, குழப்பமான வாதங்களுடன் கடுமையாகப் போராடுவான். ஒரு அரசன் பன்றியாகப் பிறந்து, பன்றிக்குட்டிகளுடன் சாக்கடையில் சுகமாக உழன்றுகொண்டிருந்த கதை உங்களுக்கு நினைவிருக்கிறதா? அந்த அரசனின் கதைதான் இவனுடையதும்.

மக்களுக்கு பகுத்தறியும் தன்மையோ, பற்றற்ற தன்மையோ, கூர்ந்த அறிவோ இல்லை. எனவே தான் அவர்களால், தங்களுடைய உண்மை

நிலையைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. பாசம், மாயை, பற்று, அறியாமை முதலிய திரைகளால் மறைக்கப்பட்டுள்ள அவர்கள் புத்தி மங்கி, கலங்கி உள்ளது. எனவே தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அவர்களால் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள முடிவதில்லை.

தன்னடக்கத்துடன் இருக்க முயற்சி செய்யுங்கள். பாசத்திற்கு மேற்பட்டு இருங்கள். தூய்மையாக இருங்கள். நன்னடத்தையையும், நல்லொழுக்கத்தையும் அபிவிருத்தி செய்து கொள்ளுங்கள். கோபத்தை கட்டுப்படுத்துங்கள், ஜபம், கீர்த்தனை, தியானம், கீதை படித்தல் இவற்றை ஒழுங்காகச் செய்யுங்கள். ஒரு உதாரண இல்லறத்தானாக வாழுங்கள்.

ஓ ராம்! மனைவியை தேவியாகப் பாவியுங்கள். அவள் வீட்டின் மகாலக்ஷ்மி, அவள் வீட்டின் மகாராணி. ஒரு பெண்மணி கௌரவிக்கப்படும் இடத்தில்தான் செல்வம், வளம், வெற்றி, சமாதானம் இவை இருக்கின்றன. ஓ லீலா! ஒரு பதிவிரதையாக திகழுங்கள். உங்கள் கணவருடன் சண்டை போடாதீர்கள். சாவித்திரி, அனுசூயா அல்லது சீதை போன்று விளங்குங்கள். நீங்கள் அனைவரும் தூய்மையான வாழ்க்கையை பக்தியுடன் வாழ்ந்து சிறந்த ஆசீர்வாதத்தை இந்த ஜன்மத்திலேயே பெறுவீர்களாக.

## 27. வியாபார ஒழுக்க நெறிகள்

வர்த்தகத் துறைக்கும் ஒழுக்க நெறிகள் உள. தொழிலதிபரும் இந்த ஒழுக்க நெறிகளைப் பின் பற்ற வேண்டும். அப்பொழுதுதான் அவருக்குப் பாவம் வராது. அப்பொழுதுதான் அவர் வளம் கொழிக்க வாழ்வார்.

தொழில் துறையில் ஒருவர் முன்னேற விரும்பினுல், பொய் சொல்லியே ஆக வேண்டும் என்பார் உளர். இது ஒரு மிகக் கொடிய தவருகும். மிக நேர்மையாகவும், உண்மையாகவும் உள்ளவர்கள் தொழில் துறையில் சிறந்து விளங்குவர். அவர்களுடைய விவகாரங்களில் உண்மையேயிருப்பதால் மக்கள் அவர்களிடம்தான் செல்வர்.

துணிக்கடையில் புரட்டு முதன் முதலில் நுழைகிறது. ஒரு துணிக்கடைக்கு நீங்கள் சென்ருல் முதலில் அந்த வியாபாரி மீட்டர் 8 ரூபாய் என்று விலை கூறுவார். பிறகு பேரம் பேசுதலும் நடைபெறுகின்றது. கடைசியாகக் கடைக்காரர் அதே துணியை விலை குறைத்து கொடுக்கச் சம்மதிக்கிருர். இப்படிப்பட்ட வியாபாரம்தான் பெருவாரியான கடைகளில் நடைபெறுகின்றன. பொய் சொல்லி பிறரை ஏமாற்றுபவனும் ஒழுக்கமற்ற வாழ்க்கை வாழ்பவனே.

வியாபாரிகள் உணவுப் பொருட்களில் கலப்படம் செய்கிருர்கள். தச்சன் மோசமான மரத்தை உபயோகப்படுத்தி, நல்ல மரத்திற்குரிய விலையை வாங்குகிருன். ஒரு (ஒப்பந்தக்காரர்) மூன்ரும்தரச் செங்கலை உபயோகப்படுத்தி, முதல் தரச் செங்கலுக்கு உள்ள விலையைப் போடுகிருன். இவை அத்தனையும் ஏமாற்றுதல்களே!

தவருன வழியில் பொருள் சம்பாதித்து சிறந்த உணவு வகைகளை உண்பது, காரில் போவது, நகர சபை உறுப்பினர் ஆவது இவையெல்லாம் நிரந்தர ஆனந்தத்தை அளிக்கக்கூடியனவா? வாழ்க்கையின் லக்ஷியம் இதுவல்ல. மகிழ்ச்சி பற்றிய ஒரு முட்டாளின் கணிப்பு இது. இது வெறும் சிறு பிள்ளைத்தனம்.

நேர்மையான வழியில் சம்பாதியுங்கள். நேர்மையின்மையும், ஏமாற்றுதலும், உங்களுக்கு, புற்று நோய், க்ஷயம், வயிற்றுப்புண், மூல முளை, செவிடு, ஊமை, குருடு, கால் எரிச்சல், இதய எரிச்சல் முதலிய தீராத நோய்களைக் கொடுப்ப தோடல்லாமல், அடுத்த பிறவியில் அங்கஹீனர் களாகப் பிறக்கவும் வழி செய்யும். ஒவ்வொரு கர்மத்திற்கும் பிரதிபலன் உண்டு. இப்பிறவியில் செய்யும் ஒவ்வொரு தவறான காரியத்திற்கும், அடுத்த பிறவியில் கஷ்டப்பட நேரிடும். மனம், வாக்கு, காயம் இவற்றைப் பற்றிக் கவனமாக இருங்கள். நல்லவராக இருங்கள். நன்மையே செய்யுங்கள். காரணகாரிய விதியைப் புரிந்து கொள்ளுங்கள்.

உங்கள் வருமானத்தில் பத்தில் ஒரு பகுதியை தர்மத்திற்குச் செலவிடுங்கள்.

நியாயமான, மிதமான, லாபத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் விவகாரங்களில் உண்மை யாகவும், நேர்மையாகவும் இருங்கள். நிறைய தர்மம் செய்யுங்கள். உங்கள் வியாபாரத்தில், நீங்கள் வளம் பெறுவீர்கள். தொழிலில் நீங்கள் கறைபட மாட்டீர்கள். ஊழல், உங்களை அணுகாது. யாண்டும் லக்ஷ்மிதேவி உங்களுடன் இருப்பாள். ஒவ்வொரு பௌர்ணமியன்றும், சத்திய நாராயண பூஜை செய்யுங்கள். சமூகநல இயக்கங்கள், சமய இயக்கங்களுக்கு உதவி செய்யுங்கள். ஸம்ஸ்கிருத பள்ளி, ஆயுர்வேத வைத்தியசாலை, மருத்துவமனை, பெண்கள் பள்ளி, இலவச ஆரம்பப் பள்ளி இவற்றைத் தொடங்குங்கள். கிராமங்களில் குடிநீர் கிணறுகளை அமைத்துக் கொடுங்கள். சங்கீர்த்தன மண்டபங் களைக் கட்டுங்கள். உங்கள் லாபம், தர்ம

காரியத்திற்குப் பயன்படட்டும். உங்களுக்குப் பெரும் புண்ணியம் கிடைக்கும். இவ்வுலகிலும், விண்ணுலகிலும் நீங்கள் பேரானந்தம் அடைவீர்கள்.

உங்கள் உள்ளத்தே வீற்றிருக்கும் ஆண்டவன், உங்கள் செயல்களுக்கும், எண்ணங்களுக்கும், சாக்ஷியாக இருக்கிருன் என்பதை நீங்கள் யாண்டும் நினைவில் கொண்டால், காரண காரிய வழிகளை நீங்கள் உண்மையிலேயே புரிந்து கொண்டால், நீங்கள் தீயனவற்றைச் செய்யத் துணிய மாட்டீர்கள். தீயனவற்றைத் தவிர்ப்பீர்கள். காலப்போக்கில் உங்களுடைய தவருன காரியங்களைக் குறைத்துக் கொள்வீர்கள்.

வேதாந்த உண்மையான, அத்வைதத்தை (ஒருமைப்பாட்டை) நீங்கள் உண்மையாகவே புரிந்து கொண்டால், பிறரை ஏமாற்ற நீங்கள் முயற்சிக்க மாட்டீர்கள். பிறரை ஏமாற்றும் பொழுது, நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்கிறீர்கள். பிறருக்கு உதவினுல், உங்களுக்கே உதவி செய்து கொள்வதாகிறது. எல்லா உயிரினங்களிலும் உள்ள ஆன்மா ஒன்றேதான். அதுதான் உண்மை.

## 28. மருத்துவ ஒழுக்க முறைகள்

தனது நோயாளிகளின் ரகசியங்களை டாக்டர்கள் பிறருக்குத் தெரிவிக்கக் கூடாது.

ஒருவனுக்கு வைத்தியம் செய்ய ஒப்புக் கொண்டபின் நேற்று பணம் கொடுக்கவில்லை என்பதால், இன்று அவன் வீட்டுக்குச் சென்று வைத்தியம் செய்ய மறுக்கக் கூடாது. நோயாளி

குணமடையும் வரை, வைத்தியம் செய்ய வேண்டிய தார்மீகப் பொறுப்பு வைத்தியருக்கு இருக்கிறது. நோயாளி, டாக்டருக்கு உரிய பணத்தை இரண்டு நாள் கழித்துக் கொடுத்து விடலாம்.

ஒரு நோயாளி அவசரமாக அழைத்தால், தொழில் முறைக் கட்டுப்பாடு என்ற போர்வையில் போகாமல் இருக்கக் கூடாது. நோயாளி வேறு ஒரு டாக்டரிடம் போய்விட்டான் என்பதற்காக அவனுக்கு வைத்தியம் செய்ய மறுக்கக் கூடாது.

ஹிரண்யா ஆப்ரேஷனுக்காக ஒரு டாக்டர் ரூபாய் 500 வாங்குகிறார். நோயாளி ஆப்ரேஷனுக்காக மேஜைமேல் படுக்க வைக்கப்பட்டு, வயிறு திறக்கப்படுகிறது. எதிர்பாராத சிக்கல்களை டாக்டர் உள்ளே காண்கிறார். வேறு ஒரு ஆப்ரேஷனும் செய்யப்பட வேண்டியுள்ளது. நோயாளியின் தகப்பனாரிடம் டாக்டர் ''நீங்கள் மேலும் ரூபாய் 500 தர வேண்டும். இப்பொழுது புதிதாக உள்ள சிக்கலுக்கு வேறு ஒரு ஆப்ரேஷனும் செய்ய வேண்டும். இது அதிகப்படி வேலை. எனவே அதிகப்படி பணம் தரவில்லையென்றால், நான் இந்த ஆப்ரேஷனை செய்யமாட்டேன்'' என்று கூறினால், மருத்துவ அறநெறிக்கு எதிராக டாக்டர் போகிறார். ஒரு உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கும் பொழுது பேரம் பேசுவது மனிதத் தன்மையற்றது. அந்த டாக்டர் ஆப்ரேஷனை வெற்றிகரமாக முடிக்க வேண்டும். பிறகு நோயாளி கொடுக்கும் நிலையில் இருந்தால், அவனிடம் நயமாகக் கேட்டு அதிகப்படி பணத்தைப் பெறவேண்டும்.

துன்பம் துடைப்பதே டாக்டரின் தலையாய கடமை. எவ்வளவு குறைந்த நேரத்தில் முடியுமோ,

அதற்குள் வைத்தியம் செய்து குணமாக்க வேண்டும். மேலும் சில காலம் பணம் வாங்கலாம் என்பதற்காக, முழுமையாகக் குணமடைவதைத் தள்ளிப்போட்டுக் கொண்டே போவது கொடுமையான குற்றம். ஒரு நோயாளியின் மருத்துவ சிகிச்சையை நீடித்துக்கொண்டே போகாதீர்கள். நோயாளிகளின் எண்ணிக்கை குறையக் கூடாது என்பதற்காக வியாதியை நீடிப்பது பெருங் குற்றம்.

ஏதாவது ஒரு கொள்ளை நோய் பரவினால், அதைத் தடுக்க டாக்டர் தன்னால் இயன்றது அத்தனையும் செய்ய வேண்டும். அவர் அந்த நோயைக் கட்டுப்படுத்த பல்வேறு முறைகளையும் சுலபமான வழிகளையும் மக்களுக்கு சொல்லிக் கொடுக்க வேண்டும்.

ஒரு ஏழை நோயாளி அவரிடம் வந்தால் உடனே வைத்தியம் செய்து இலவசமாக மருந்து கொடுக்க வேண்டும். ஏழைகளுக்கு வைத்தியம் செய்வதில் அவருக்குப் பேரானந்தம் ஏற்பட வேண்டும்.

வெறும் தண்ணீரை ஊசி மூலம் ஏற்றி விட்டு, மிக விலையுயர்ந்த மருந்தைப் போட்டிருக்கிறேன் என்று சொல்லி நோயாளியிடம் பெரும் பணம் பறிக்கக் கூடாது. இது மிகக் கொடிய ஒழுக்கக் கேடாகும்.

மிதமான கட்டணமே வசூலிக்க வேண்டும். டாக்டருடைய குறிக்கோள், லக்ஷாதிபதி ஆக வேண்டும் என்பதாக இருக்காமல், நல்ல அன்பான அனுதாபமுள்ள டாக்டர் ஆக வேண்டும். ஆத்ம

பாவனையுடன் உளமாற சேவை செய்வதின் மூலம் மட்டுமே, விரைவில் இதய சுத்தி அடைந்து, ஆண்டவனை உணர்வதற்கு ஒரு பெறும் வாய்ப்பு உள்ள களம் அவர் முன் இருக்கிறது.

தவருன கருத்துக்களைக் கூறி நோயாளியை பயமுறுத்தாதீர்கள். ''இது தீராத நோய். இது மிகவும் முற்றிய க்ஷயம். என்றெல்லாம் கூறக் கூடாது. டாக்டரின் கருத்துக்குள்ள வலிமை அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். தவருன கருத்துக்கள் நோயாளியை விரைவில் கொன்று விடும். நோயாளியிடம் வைத்தியர் எப்பொழுதுமே உற்சாகம் ஊட்டக் கூடிய இனிமையான வார்த்தை களையே கூறவேண்டும். ''தம்பி! பயப்படாதே! நான் உன்னைச் சில தினங்களில் குணப்படுத்தி விடுவேன். நீ விரைவிலேயே நன்ருக ஆகிவிடு வாய்'' என்று கூறக் கூடிய டாக்டர்தான், அவதிப் படும் மனிதர்களுக்கு உண்மையிலேயே நன்மை செய்பவர். நோயாளிகளின் கஷ்டத்தைக் கண்டு டாக்டரின் உள்ளம் உருக வேண்டும். வீடு வீடாகச் சென்று ஏழைகளுக்கு அவர் இலவச வைத்தியம் செய்ய வேண்டும். தனது வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை ஏழைகளுக்கு மருந்து கொடுக்க அவர் செலவழிக்க வேண்டும். துன்பம் கண்டு தானே சென்று துயர் துடைப்பது டாக்டரின் தார்மீகக் கடமை.

ஒரு டாக்டர் அனைவரையும் ஆண்டவனின் உருவங்களாக எண்ணி, மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கருத வேண்டும். அத்தகைய டாக்டர் நடமாடும் தெய்வம். இத்தகைய டாக்டரின் புகழ் ஓங்குக.

## 29. சட்ட ஒழுங்கு முறைகள்

வழக்கறிஞர், சட்ட நிபுணர், வக்கீல், இவர்கள், தங்கள் தொழில் விஷயங்களில் பின்பற்ற வேண்டிய ஒழுங்கு முறைகள் உள. நிச்சயம் ஜெயிக்காது என்று தெரிந்த, சந்தேகமான வழக்குகளை, பணம் கிடைக்கிறது என்பதற்காக மட்டும் அவர் ஏற்று நடத்தக் கூடாது.

பொய் சாட்சிகளை வழக்கறிஞர்கள் தயாரிக்கக் கூடாது. பொய் சாட்சிகளைத் தயாரித்தலே ஒரு குற்றமாகும். அது ஒரு கொடிய பாவம். பொய் சாட்சி தயாரிக்கும் வழக்கறிஞர் தனது மன சாட்சியையும், ஆன்மாவையும் கொலை செய்கிறார். மேலும், பிறரையும் கெடுக்கிறார். ஆன்மீக நெறியில் அவருக்கு முன்னேற்றம் கிடையாது. அவரால் தைரியமாக விவாதம் செய்ய முடியாது. ஏனென்றால், பொய்மைக்கு வலிமை இல்லை. அவரால் கம்பீரமாகத் தலைநிமிர்ந்து நிற்க முடியாது. ஏனென்றால் அவரது தார்மீக முதுகெலும்பு பலவீனமாக உள்ளது. பல்வேறு முறைகளில், திரித்தும் சுற்றி வளைத்தும் அவர் விவாதித்தாலும், அவருக்கு வெற்றி நிச்சயமில்லை. இறுதியில் உண்மையே வெல்லும்.

ஏழை மக்களின் வழக்குகளை இலவசமாக எடுத்துக்கொள்ள வேண்டும். பொதுநலத்திற்காக கட்டணம் இல்லாமல் சேவை செய்ய வேண்டும். அப்பொழுது அவரது கர்மம், கர்ம யோகமாக அமையும். இது அவரது உள்ளத்தை தூய்மைப் படுத்தும். புலாபாய் தேசாய் எவ்வளவு ஆழமாகவும், உண்மையாகவும், தனது கடைசி காலத்தில் கூட, பொதுநலக் கொள்கைக்காக உழைத்தார் என்பதை கவனியுங்கள். இந்தப் புனிதப் பணியினால் அவர் இறவாப் புகழ் பெற்றார்.

ஒரு முறை பண்டித மோதிலால் நேரு, காங்கிரஸ்காரர்களிடம் கூட கட்டணம் வசூலிக்க எண்ணினார். ஜவஹர்லால் நேரு, ''மதிப்பிற்குரிய தந்தை அவர்களே! யாருக்காக நீங்கள் பணம் சேர்க்கிறீர்கள்'' என்று கேட்டார். மோதிலால், ''உனக்காகத்தான், நீ எனது அருமை மைந்தன் அல்லவா?'' என்று பதில் கூறினார். அதற்கு ஜவஹர்லால் நேரு கூறிய பதிலாவது ''அன்புத் தந்தையே! உங்கள் சம்பாத்தியத்திலிருந்து எனக்கு ஒரு சல்லிக் காசு கூட வேண்டாம். நான் சுதந்திரமாக சம்பாதித்துக் கொள்வேன். தயவு செய்து இலவசமாக இந்த வழக்கில் ஆஜராகுங்கள். இது பொதுநல சேவை'' என்றார். இவ்வார்த்தைகள் மோதிலால் நேரு அவர்களின் கண்களைத் திறந்தது. மோதிலால் நேருவின் வாழ்க்கையையே மாற்றியது. மோதிலால் அவர்கள் வழக்கறிஞர் தொழிலை விட்டு விட்டு, உண்மையான, தீவிரமான, காங்கிரஸ் தொண்டரானார்.

உண்மையை வேண்டுமென்றே பொய்யாக்கியும், பொய்யைத் திரித்துக் கூறி உண்மை போன்று தோன்றச் செய்யும் வழக்கறிஞர்கள், கலிபுருஷனின் அருமைக் குழந்தைகள். அவர்கள், சைத்தானின் கைப்பாவைகளாக விளங்குகின்றனர். பொய் சாட்சி தயார் செய்யாத, மோசமான வழக்குகளை மேற்கொள்ளாத, மன சாட்சியுடைய வக்கீல்கள் சிலர் உளர். அவர்களே வழக்கறிஞர்களில் அரிமாக்கள். அவர்களுக்குத் தொழில் அபரிமிதமாக இருக்கும். நேர்மையாக, உண்மையாக உழைக்கும் வழக்கறிஞர்கள் என்று அவர்கள் எங்கும் புகழ் பெற்றிருப்பர். நிறைய கட்சிக்காரர்கள் அவர்களிடம் வந்து குவிவார்கள். உண்மையுள்ளவர்கள் மட்டுமே பிரகாசிப்பார்கள். அவர்கள் மட்டுமே வெற்றியடைவார்கள்.

காந்திஜி எழுதிய, ''சத்திய சோதனையைப்'' படியுங்கள். அவர், தொழிலில் எத்தனை நேர்மை யாக இருந்தார் என்பது உங்களுக்குத் தெரிய வரும்.

உங்களுடைய வாக்குத் திறமையினால், எத்தனை குற்றமற்றவர்களை சிறைக்கும், தூக்கு மேடைக்கும் அனுப்பியுள்ளீர்கள். இது எவ்வளவு பெரிய குற்றம்! எப்பேர்ப்பட்ட மன்னிக்க முடியாத செயல்! இந்த பாவச் செய்கைக்கு நீங்கள் பலனை அனுபவித்தே தீருவீர்கள். நல்ல மறுபிறவிக்கு ஏற்ற புண்ணியம் உங்களிடம் இருக்காது. கீழான பிறவிகளையே எடுப்பீர்கள். அடுத்த பிறவியில், தீராத நோய்களுக்கு ஆளாவீர்கள். மிகவும் பரபரப்பூட்டிய, திருப்பதி வழக்கைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? திருப்பதி வெங்கடாசலபதியே சாக்ஷியாக வந்தார். அந்த வழக்கை விசாரித்த நீதிபதி தொழிலை விட்டு விட்டு தவமுனி ஆகிவிட்டார்.

பணம் குறிக்கோளாக இருக்கக் கூடாது. பணத்தால் நிரந்தர ஆனந்தத்தைப் பெற முடியாது. நல்லொழுக்க வாழ்க்கை வாழுங்கள். நேர்மையாகவும், உண்மையாகவும் இருங்கள். பொய் சாட்சிகளைத் தயார் செய்யாதீர்கள். ஏழைகளுக்காக இலவசமாக வாதாடுங்கள். ஜபம், கீர்த்தனை, தியானம் செய்யுங்கள். உங்களுக்கும் இறுதியான முக்தி அல்லது அமரநிலையோடு கூடிய பேரானந்தப் பெருநிலை கிடைக்கும்.

## 30. தொழில் ஒழுங்கு முறைகள்

காலம் பெரும் மாறுதலடைந்திருக்கிறது. நூறு வருடங்களுக்கு முன் இருந்த சமுதாயம் இப்பொழுது இல்லை. பழைய கால சமுதாய

அமைப்பில் இல்லாத புதுத் துறைகளை மனித சமுதாயம் உருவாக்கியுள்ளது. பல தேசங்கள் முழுவதும் தொழில்மயமாக மாறியுள்ளன. எங்கும், பெரிய தொழில்களும் தொழிற்சாலை அமைப்புகளும் தோன்றியுள்ளன. எனவே, இந்த சூழ்நிலைகளுக்கு ஏற்ற ஒழுக்க முறைகள் தோன்றியுள்ளன.

தொழிலதிபர்கள், மிகவும் இயந்திர புத்தி உடையவர்களாக மாறிவிட்டார்கள். தனது கீழ் வேலை பார்க்கும் தொழிலாளர்களை, அவர்கள் இயந்திரங்களாகக் கருதுகிறார்கள். அவர்களுக்குத் தொழிலாளிகள் மீது அனுதாபமில்லை. இது தவறு. தொழிலாளர்களின் உழைப்பு முதலாளியின் வளத்தைப் பெருக்க உதவுவதால் தொழிலாளர் களின் நலத்தைப் பேணுவது, முதலாளியின் தார்மீகப் பொறுப்பாகிறது.

ஏழை மக்களிடையே இருந்துதான், பெரிய தொழில்களுக்குத் தொழிலாளர்கள் எடுக்கப்படு கிறார்கள். இந்தத் தொழிலாளர்கள் தாங்கள் உயிர்வாழ உழைக்க வேண்டிய நிர்பந்தத்தில் இருக் கிறார்கள். தொழில் அதிபர்கள் இந்த நிலையைத் தவறாகப் பயன்படுத்தி, தொழிலாளர்களை கசக்கிப் பிழியக் கூடாது. தொழிலதிபர் அவர்களுக்கு நியாயமான, போதுமான கூலி கொடுப்பதோடல் லாமல் மற்ற வசதிகளையும் செய்து கொடுத்து, தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் முதலியன செய்யும் நிலைக்குத் தள்ளாமல் இருக்க வேண்டும். தொழிலாளர்களை இதயமற்ற முறையில் சுரண்டுவது தர்ம நெறியை கடுமையாக மீறுவ தாகும்.

தொழில் முறைகள் 'ஒப்பந்த' அடிப்படையில் உள்ளன. தொழில்துறை முற்றிலும் சமயச் சார்பு

அற்றது என்ருலும், மனிதர்களிடையே பரஸ்பரம் செய்து கொண்ட ஒப்பந்தம் எப்பொழுதுமே புனிதமானது. இந்த பரஸ்பர ஒப்பந்தத்தை மதிப்பதில் தொழிலாளிக்கும் சமமான பங்கு உண்டு. தனது முதலாளியின் நலனுக்குத் தன்னுல் முடிந்த அளவு சிறப்பாகவும், நாணயமாகவும், செயலாற்ற வேண்டும்.

பேராசையும், பெரும் லாபம் சம்பாதிக்க வேண்டுமென்ற அவாவும், தொழில்துறை ஒழுங்கீனங்களுக்குக் காரணமாக அமைகின்றன. லாபத்தையே நோக்கமாகக் கொண்ட பேராசையே தொழில்துறை ஒழுக்கக் கேட்டிற்குக் காரணங்கள். திருப்தி இல்லாத லாப இச்சையே உங்களை எல்லா தர்மத்தையும் புறக்கணிக்கச் செய்கின்றது. எனவே பணத்தாசை பிடித்து அலையாதீர். மனித சமுதாயத்திற்கு நன்மை செய்வதற்காகத்தான், ஆண்டவன் உங்களுக்கு தொழில் அறிவும், நிர்வாகத் திறனும், பண பலமும் அளித்திருக்கிருன். நீங்கள் இவைகளை முதலில் பொதுநலத்திற்கும் பிறகு உங்கள் நலத்தைப் பெருக்கிக் கொள்ளவும் உபயோகிக்க வேண்டும்.

தொழில் அதிபர்கள், சமுதாயத்தின் நன்மைக்கும், முன்னேற்றத்திற்கும் உதவுபவர் களாக மாறுங்கள்.

## 31. அனைத்து நாட்டு ஒழுங்குமுறை

சமுதாய ஒழுங்குமுறைகள் இருப்பதுபோன்று, உலகத்திலுள்ள தேசங்களிடையே, சமாதானம் நிலவுவதற்காக, சில ஒழுங்கு முறைகள் உள்ளன. உலக நாடுகளுக்கிடையே ஒழுக்க விதிகளை அனைத்து தேசங்களும் கடைப்பிடித்தால் மட்டுமே,

தேசங்கள் வளம்பெற முடியும். உலக நாடுகள் இந்த விதிமுறைகளைக் கடைப்பிடித்திருந்தால், போரே இருந்திருக்காது.

பதவி ஆசை, ஆதிக்க உணர்வு, தன்னலம் இவைகள் தேசங்களை தன் வயப்படுத்திக் கொள்வதினால், தேசங்கள் புரிந்துகொள்ளும் தன்மையையும், ஒழுக்க முறைகளை அறியும் தன்மையையும் இழந்து விடுகின்றன. எனவே அந்த நாடுகள், ஒழுக்க முறைகளை மீறுகின்றன.

தனிப்பட்ட நபர்களுக்கு ஏற்பட்ட, ஒழுக்கக் கட்டுப்பாடுகள் தேசங்களுக்கிடையேயும் பொருந்த வேண்டும். அனைத்து தேசங்களுக்கிடையே ஒழுக்கம் நிலவுவது மிகவும் தேவை. உலகப் போருக்குப் பிறகு இந்த அத்தியாவசிய தேவை பல்வேறு தேசத் தலைவர்களால் உணரப்படுகிறது. ஒரு சர்வதேச அமைப்பு நிறுவப்பட வேண்டும். அப்பொழுதுதான் சர்வதேச ஒழுக்கத்தை நடைமுறைப் படுத்த முடியும். நன்கு அமைக்கப் பட்ட சர்வதேச அமைப்பினால், போரைத் தடுக்கவும், உலகில் சமாதானத்தை நிலை நிறுத்தவும் முடியும்.

ஆனால் இப்படிப்பட்ட அமைப்பின் உறுப்பினர்கள், சிறந்த பண்பாளர்களாகவும், தூய்மையான, உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டவர்களாகவும் இருந்தால்தான், இந்த அமைப்புக்கள் வெற்றிகரமாக இயங்கும். சகிப்புத் தன்மை, ஒத்துழைப்பு, சகோதரத்துவம் இவைகளில் ஊறியவர்களாக அந்த அமைப்பின் அங்கத்தினர்கள் இருக்க வேண்டும். அவர்கள் குறுகிய இனப் பற்றை ஒதுக்கி வைத்துவிட்டு, பரந்த உலக நோக்கு உடையவர்களாக இருக்க வேண்டும்.

விஞ்ஞான முன்னேற்றம் காலத்தையும், தூரத்தையும் அழித்துவிட்டது. ஒரு சில மணி நேரங்களில் நீங்கள் லண்டன் மாநகருக்கோ, நியூயார்கிற்கோ சென்று விடலாம். தற்காலத்தில் கப்பல்கள், ஆகாய விமானங்கள், ரயில் பாதைகள், வானொலி, தொலைக் காட்சி இவை உலகத்தை ஒன்றாக்கிவிட்டன. இப்பொழுது உலகம் முழுவதும் நன்கு பின்னிப் பிணைக்கப் பட்டுள்ளது. தேசங்களும், நாடுகளும், இப்பொழுது சுதந்திரமடைந்துள்ளன. ஒரு நாட்டின் பொருளாதார உயர்வோ, தாழ்வோ, மற்ற நாடுகளையெல்லாம் பாதிக்கிறது.

உலகம் முழுவதும், ஏதோ ஒரு வகையில் ஒன்றுபடுத்தப்பட்டிருந்தாலும் கூட, சர்வதேச ஒழுக்க முறை இன்னும் காணப்படவில்லை. தேசங் களுக்கிடையே நீதியோ, அன்போ, சரியான, உறவுமுறைகளோ போதுமான அளவு இல்லை. மனித சகோதரத்துவம், மறக்கப்பட்டுவிட்டது. ''பலவான் செய்கையே சரி'' என்ற நீதியும், ''தகுதிவாய்ந்தவனே வாழத் தகுந்தவன்'' என்ற கோட்பாடும், சர்வதேச உறவுகளிலும் பின்பற்றப் படுகின்றன. எந்த தேசங்கள் அதிக அளவில் அணு குண்டு வைத்திருக்கின்றனவோ அவைகள்தான் உலகத்தை ஆள்கின்றன. இந்த தேசங்கள் அதிக உரிமைகளையும், சலுகைகளையும், வர்த்தகத்திலும், வியாபாரத்திலும் பெறமுடிகிறது. இந்த தேசங்கள் பரந்த பகுதிகளை தன்னகத்தே கொண்டுள்ளன. பலவீனமான தேசங்களை அவர்கள் சுரண்டி, தங்களுக்கு அடிமைகளாக வைத்திருக் கின்றனர். போருக்கும், ஒழுக்கநெறிக் கேட்டிற்கும் இதுதான் காரணம்.

எல்லா தேசங்களுக்கும் சம உரிமைகள் வழங்கப்பட வேண்டும். ஒவ்வொரு தேசத்திற்கும்

சமமான சலுகைகள் தரப்படவேண்டும். ஒரு தேசத்தின் தனி உரிமையாக எதுவும் இருக்கக் கூடாது. எந்த விஷயத்திலும், ஒரு தனிப்பட்ட தேசத்திற்கு முழுக்கட்டுப்பாடோ, முழு ஆதிக்கமோ இருக்கக் கூடாது. சூரிய ஒளி, காற்று, நீர் இவை எப்படி எல்லோருக்கும் பொதுவாக உள்ளதோ அது போன்று கடல், நிலம், ஆகாயம் இவைகளும் எல்லா தேசங்களுக்கும் பொதுவாக இருக்க வேண்டும். எல்லோரும் கடவுளின் குழந்தைகள். எனவே எல்லோரும் சகோதரர்கள்.

தவருகப் புரிந்து கொண்டு, தவருகக் கடைப் பிடிக்கப்படும் தேசப்பற்று, சர்வாதிகாரம், முதலாளித்துவம், ராணுவ ஆதிக்கம் இவைகள் சர்வதேச ஒழுக்க முறைக்கு முட்டுக் கட்டைகளாக இருக்கின்றன. சர்வாதிகாரமும், ராணுவ ஆதிக்க மும் ஒழிய வேண்டும். மனிதத்தன்மை, மனிதாபி மானம், வேதாந்தம் ஆகியவை, அவைகளின் இடத்தைப் பெற வேண்டும். அப்பொழுதுதான் உலகில் நிரந்தர அமைதி நிலவும். பல்வேறு தேசத் தலைவர்களும், சர்வாதிகாரிகளும், இந்தி யாவிற்கு வந்து, வேதாந்தத்தைப் பயின்று அதற்குத் தக வாழவேண்டும்.

உலகிலுள்ள எல்லாப் பள்ளிகளிலும், கல்லூரி களிலும், வேதாந்தமும், வேதாந்த நெறிகளும் கட்டாயப் பாடமாக்கப்பட வேண்டும். இவை களைச் சரியாகப் புரிந்து கொண்டு, எல்லோராலும் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். உலக சமாதானம், அன்பு, ஒற்றுமை, சரியாகப் புரிந்து கொள்ளுதல், உலக இணக்கம், மனிதகுல சகோதரத்வம் இவைகளை வேதாந்தத்திஞல்தான் ஏற்படுத்த முடியும். இதஞல்தான் அணு குண்டு, இயந்திரத் துப்பாக்கி இவற்றின் உற்பத்தியை ஒரு முடிவிற்குக் கொண்டு வரமுடியும்.

## அத்தியாயம் — ஐந்து

# சாதுக்கள் சந்நியாசிகள் இவர்களின் சேவை

### 32. சந்நியாசிகளும் சமூக நலமும்

ஒவ்வொரு கல்லூரி விடுதியிலும் ஒரு சந்நியாசி அல்லது சாதுவை தங்குமாறு ஏற்பாடு செய்ய வேண்டும். தினந்தோறும் அவர் மாணவர்களுக்கு அறநெறி, ஆன்மீக விஷயங்கள் பற்றி சுலபமான பாடங்களையும் தியானம், வழிபாடு இவைகளில் நடைமுறைப் பயிற்சியையும் அளிக்க வேண்டும். பகவத் கீதை, பாகவதம், ராமாயணம், உபநிஷத்துக்கள் இவைகளையும் கற்பிக்க வேண்டும். அப்பொழுதுதான், மாணவர்கள் நன்னடத்தை உடையவர்களாகவும், செம்மையாக உருவாக்கப் பட்டவர்களாகவும் அமைவார்கள். தற்பொழுது, மாணவர்கள் நிலை மிகவும் பரிதாபத்துக்குரியதாக உள்ளது. அவர்கள் கடவுளிடமும், புனித நூல் களிடமும், நம்பிக்கை இழந்து விட்டனர். அவர்கள் சமயமற்றவர்களாக மாறிவிட்டனர். சந்நியாசி களுடன் மாணவர்கள் நேரடியாகத் தொடர்பு கொள்ள வாய்ப்பு அளிக்கும் வகையில் சந்நியாசிகளை விடுதிகளில் வைத்து பராமரித்து இளம் தலைமுறையினருக்கு ஆன்மீக எழுச்சி ஏற்படுத்த வேண்டியது, கல்வி நிறுவனங்களின் நிர்வாகக் குழுத் தலைவர்களின் கடமை.

சிறைச் சாலைகளுக்கு வாரம் ஒரு முறையாவது ஒரு சந்நியாசி அல்லது சாது அழைக்கப்பட வேண்டும். அந்த சந்நியாசி கைதிகளைக் கூட்டி வைத்து, பிரார்த்தனை, கீர்த்தனை செய்து கைதிகளை

நீதிபோதனை மூலம் நல்லவர்களாக மாற்ற வேண்டும். மனிதன் முக்கியமாக அறியாமை காரணமாகத் தான் குற்றமோ, திருட்டோ செய்கிறான். சரியான பயிற்சி மூலம் அறியாமை அகற்றப்பட்டால், குற்றவாளிகளோ, சிறைச்சாலைகளோ உலகில் இருக்காது. நிச்சயமாக இந்த பூமியே ஒரு சுவர்க்கமாகத் திகழும்.

சந்நியாசி ஒருவர், ஒரு நகரத்தில் வசித்தால், அவருக்கு அந்த நகரத்திலுள்ள மருத்துவமனைக்கு, தினம் தோறும் சென்று நோயாளிகளை உற்சாகப் படுத்த வாய்ப்பு அளிக்க வேண்டும். நோயாளிகள் விரைவாகக் குணமடைய அவர் பிரார்த்தனை செய்ய வேண்டும். நோயாளிகளுக்கிடையே, கீர்த்தனை, பொது தியானம் இவைகள் நடத்தப்பட வேண்டும். நோயாளிகளின் உடலில் உறையும் ஆன்மாவிற்கு நோய் இல்லை, அழிவு இல்லை என்பதை அவர் கூறவேண்டும்.

மேற்கூறிய ஆலோசனைகள் செயல்படுத்தப் பட்டால் ஆன்மீக எழுச்சி ஏற்படும். கற்றறிந்த சந்நியாசிகள், தங்களின் அமைதியான ஆசிரமங்களிலிருந்து பரபரப்பான உலகிற்கு சேவை செய்ய வரத் தயங்க மாட்டார்கள் என எண்ணுகிறேன். சமுதாய நன்மைக்கு, இத்தகைய புனிதமான குழுவினரின் முக்கியத்துவத்தை உலகம் அங்கீகரிக்க வேண்டும்.

## 33. சந்நியாசிகளின் பணி

சாதுக்களுக்கும், சந்நியாசிகளுக்கும் தங்கள் வாழ்வில் ஒரு குறிக்கோள் உள்ளது. அவர்கள், நாட்டின் ஆன்மீகத்திற்குப் பாதுகாவலர்கள்.

மனித சமுதாய முன்னேற்றத்திலும் அவர்களுக்குப் பங்கு உண்டு. அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள புனிதப் பணிக்குத் தங்களை ஆயத்தப்படுத்திக் கொள்வதற்காக சாதுக்களும், சந்நியாசிகளும் ஆரம்பகாலத்தில் மனித சமுதாயத்திலிருந்து ஒதுங்கி வாழ்கிறார்கள். ஏனென்றால், இது ஒரு அவசிய ஒழுக்க நியதியாக இருக்கிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக, இந்த நிபந்தனையை நாம் நிரந்தரமாக்கிவிட்டோம். ஆதலால், சந்நியாசிகளாகிய நாம், எழுச்சி பெற்று தேச முன்னேற்றத்தில் நமக்குரிய பங்கை நிறைவேற்ற வேண்டும். ரத்தக் களறியும், காட்டுமிராண்டித் தனமான சண்டைகளும் நிறைந்த கால கட்டத்தில் இப்பொழுது உலகம் மூழ்கியுள்ளது. நாம் சமாதானம், சகோதரத்துவம் இவற்றின் அடிப்படையில் அமைந்த புது யுகத்தை, விரைவில் மலரச் செய்யப் பாடுபடவேண்டும். புதிய மனித சமுதாய அமைப்பிற்கு ஆன்மீக அடிப்படையை அமைத்துக் கொடுப்பது உலகமெங்குமுள்ள சாதுக்கள், சந்நியாசிகள், பிக்ஷுக்கள் இவர்களின் பொறுப்பாகும்.

வருங்கால சந்ததியினரை ஆன்மீக நெறிப்படுத்தும் கடமை மகான்கள், சாதுக்கள், மகாத்மாக்கள் போன்ற ஆன்மீக வாதிகளின் தோள்களில் இருக்கின்றது. இந்த நாட்டின் சிறந்த பாரம்பரியத்தைக் காப்பாற்ற அவர்கள் இந்தப் பணியைத் தவறாமல் செய்யவேண்டும்.

இல்லறத்தார்கள், ஒழுக்க நெறி முறைகளிலும், ஆன்மீக முக்கியத்துவம் உள்ள விஷயங்களிலும், சாதுக்களின் செயல் முறை வழிகாட்டுதலை எப்பொழுதும் எதிர்பார்க்கிறார்கள்.

எனவே, சாதுக்களாகிய நாம், வாழும் உதாரணங்களாக, ஆக்கபூர்வமான வாழ்க்கையை வாழ்பவர்களாகத் திகழ வேண்டும். நாட்டிலுள்ள அனைத்து மகான்களையும், ஒற்றுமையான, இணக்கமுள்ள அமைப்பின் கீழ் கொண்டு வந்து, அந்த அமைப்பை வெற்றிகரமாக நடத்த நாம் அனைவரும் உற்சாகத்துடன் ஒன்றுபடுவோமாக.

## 34. சாது சந்நியாசிகள் மாநாடு

உலக அமைப்பின் நடுநாயகமாக சாதுக்களும், சந்நியாசிகளும் இருக்கின்றனர். உலக சமாதானத்தையும், இணக்கத்தையும் காப்பாற்ற மிகத் தகுதி வாய்ந்தவர்கள் சாதுக்களே. விரோத மனப்பான்மை கொண்டுள்ள பல்வேறு தேசங்களிடையே நெருங்கிய தொடர்பை ஏற்படுத்தி, அவைகளை ஒற்றுமைப்படுத்தும் உண்மையான கருவிகள் சாதுக்களே. ஒரு சாது அல்லது சந்நியாசியின் வாழ்க்கை மிகவும் ஆபத்தானது. அது இரு முனைகளும் கூர்மையான ஒரு கத்தியாகும். ஒரு சாதுவின் வாழ்க்கை தீவிரமான தர்ம ஒழுக்க அடிப்படையில் அமையவில்லையெனில், அவரது வாழ்க்கை பாலைவனத்தில் பெய்த மழையாகும். காவி அணிந்து, சந்நியாசி என்று கூறிக் கொண்டு, உலகம் முழுவதும் சுற்றித்திரிந்து நாட்டிற்கும், சந்நியாசி வர்க்கம் முழுமைக்கும் அவப் பெயர் உண்டாக்குபவர்கள் சிலர் இன்று உளர். சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை இவர்கள் முழுமையாகப் புறக்கணிக்கிறார்கள். இதனால் சந்நியாசிகளுக்கு கெட்ட பெயரையும் ஏற்படுத்துகிறது.

சாதுக்களையும், சந்நியாசிகளையும், உண்மையான தகுதி வாய்ந்த ஜகத் குருக்களாக

உருவாக்கவும், சாதுக்களின் பெருமையை மீண்டும் நிலை நிறுத்தவும், இந்த புண்ணியாத் மாக்களிடையே சீரான ஒற்றுமை ஏற்படுத்துவது அத்தியாவசியமாகிறது.

உண்மையான சாதுக்களுக்கும், சந்நியாசிகளுக்கும் தீக்ஷை அளித்து, காப்பாற்றி ஒரு கட்டுக் கோப்பான அமைப்பின் கீழ் வைத்திருக்க வேண்டியது அனைத்து உலக நலனுக்கு மிகவும் அவசியமானது. இப்படிப்பட்ட மாநாடுகள், மன்றங்கள், கூட்டங்கள், பட்டமளிப்பு விழாக்கள், வழி காட்டும் அமைப்புக்கள் இவைகளுக்கு இந்து மத சந்நியாசிகள் மட்டும் அழைக்கப்படாமல், அனைத்து உலக மதத்தைச் சேர்ந்தவர்களையும் அழைக்க வேண்டும். எல்லா மதங்களுக்கும் தோற்றம் ஒன்றே. அடிப்படைத் தத்துவம் ஒன்றே. அடிப்படையும் ஒன்றே. உலக ஆசா பாசங்களைத் துறந்து, உண்மையான சாஸ்வதமான, உண்மையைக் கண்டு அறிவதிலும், பொது மக்களுக்கு இந்த உண்மைகளைப் பிரச்சாரம் செய்வதிலும், தங்களுடைய வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்துக் கொண்டுள்ளவர்களின் நடைமுறை வாழ்க்கையில் வித்தியாசங்கள் இருக்கத் தேவையில்லை.

இந்த சாதுக்கள் அனைவரையும் கொண்ட ஒரு சிறப்பான அமைப்பின் கிளைகள் உலகில் எல்லா மூலை முடுக்குகளிலும் அமைத்தால், உலகில் நன்மை பரந்த அளவில் ஏற்படும். எல்லா மடங்கள், சர்ச்சுகள், மத நிறுவனங்கள், அமைப்புக்கள் இவற்றின் தலைவர்கள் ஒன்று கூடி, சாதுக்கள் — ஸ்தாபனம் திறமையாகச் செயலாற்ற, ஆக்க பூர்வமான ஆலோசனைகளை வழங்க வேண்டும்.

## 35. சாதுக்களும் பிச்சைக்காரர் தடுப்புச் சட்டமும்

சில ஆக்கபூர்வமான ஆலோசனைகள்:— சாதுக்களையும், சந்நியாசிகளையும் உபயோகமற்ற ஊர் சுற்றுபவர்கள், குற்றவாளிகள் முதலியவர்களுடன் ஒப்பிடுவது நியாயமல்ல. பண்டைய காலத்தில் சந்நியாசிகளுக்கும், சாதுக்களுக்கும் இருந்த உயர்ந்த அந்தஸ்தை அவர்களுக்கு அளிக்க அரசு விரும்பவில்லை. அவர்களுக்கு ஆன்மீக கலாச்சாரத் துறைகளில் பணியாற்றும் பொதுநலத் தொண்டர்கள் என்ற அந்தஸ்தை அரசு அளிக்க வேண்டும்.

தற்கால சந்நியாசிகள் தங்களுடைய துறவு, தியானம் இவற்றைக் கடைப்பிடிப்பதோடல்லாமல், சுவாத்யாயம், பிரவசனம் முதலிய தர்மங்களையும் கடைப்பிடிக்க வேண்டியுள்ளது. ஆகவே சாதுக்கள் இந்த நாட்டின் முதுகெலும்பாக அமைகிறார்கள்.

பரிங்ராஜக சந்நியாசிகள், தாங்கள் வேண்டுமென்றே மேற்கொண்ட ஏழை நோன்பு, பிக்ஷை எடுத்தே உண்பது முதலியவற்றால் தங்கள் போக்கில், இந்த நாட்டின் பண்டைய கலாச்சாரத்தையும், இந்தியாவின் சிறப்பையும் உலக அரங்கில் கொடி கட்டிப் பறக்கச் செய்கிறார்கள். அவர்களை சாதாரண பிச்சைக்காரர்களாகக் கருதி அவர்களை பிச்சைக்காரர் தடுப்புச் சட்டத்தின் கீழ்க் கொண்டு வரக்கூடாது. சாதுக்கள் உடையில் இருக்கும் பிச்சைக்காரர்கள் யார், உண்மையான சாதுக்கள் யார் என்று கண்டறிவதில் அரசுக்கு இருக்கும் கஷ்டத்தை நான் உணர்கிறேன்.

ஏதாவது ஒரு அங்கீகரிக்கப்பட்ட அமைப்பில் உறுப்பினராக உள்ள சாதுக்களும், சந்நியாசிகளும், பிச்சைக்காரர் தடுப்புச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிப்பதன் மூலம் இந்தப் பிரச்சனையை தீர்க்கலாம். இத்தகைய சாதுக்கள், தங்களுடன் அடையாள அட்டைகளை — அவர்கள் அங்கீகரிக்கப் பட்ட மடம் அல்லது அமைப்பின் உறுப்பினர் என்பதைத் தெரிவிக்கும் அட்டைகள் — எடுத்துச் செல்ல வேண்டுமென்று விதி செய்ய வேண்டும். அமைப்புக்களால், பதிவு செய்யப்பட்டவர்களை மாநில, மத்திய அரசுகள் சாதுக்கள் என்று அங்கீகரிக்க வேண்டும். இத்தனையும் செய்தும்கூட, இத்தகைய சான்றிதழ்களை வேண்டாத சில விரக்தர்களும், அவதூதர்களும் இருக்கக்கூடும். ஆனால் இத்தகைய விரக்தர்களும், அவதூதர்களும் தாங்களை எப்படி நடத்தினாலும், கவலைப்படப் போவதில்லை! அங்கீகரிக்கப்பட்ட ஆன்மீக ஸ்தாபனங்களிலிருந்து தேர்ந்து எடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு ஆலோசனைக்குழு அமைக்கப்பட வேண்டும். சமய அறக்கட்டளைகள் பற்றிய சட்டங்கள், ம்ற்றும் இதுபோன்ற மத சம்பந்தமான சட்டங்கள் பற்றி, அரசுக்கு ஆலோசனை வழங்க, அரசின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அமைப்பாக இந்த அமைப்பை அரசு கருத வேண்டும். மத சம்பந்தமான விஷயங்களை சரியான கோணத்தில், சட்டசபை உறுப்பினர் களுக்கும், அரசு அதிகாரிகளுக்கும் விளக்க, அறிவாளர்களையும், மூத்த மதத் தலைவர்களையும் கொண்ட இந்த அமைப்பு மிகவும் உபயோக முள்ளதாக அமையும். இத்தகைய விஷயங்களில் தவறில்லாத, நியாயமான பாரபக்ஷமற்ற அபிப்ராயங்களை அளிக்க, தர்ம சாஸ்திரத்தில் ஆழமான ஞானமுடைய நன்கு கற்றறிந்த பெரியவர்களே மிகவும் தகுதி வாய்ந்தவர்கள்.

அரசு இப்பொழுது எடுக்கும் நடவடிக்கைகள்— பிச்சைக்காரத் தடுப்புச் சட்டம் சம்பந்தப்பட்டது— முற்றிலும் தேவையற்றது என்றும் கூறமுடியாது. சமீப காலங்களில், சாதுக்கள், சந்நியாசிகள் இவர்களின் தரம் துரதிருஷ்டவசமாகக் குறைந்து போய் விட்டது என்பது உண்மை. எனவே, சாதுக்களையும், சந்நியாசிகளையும் சமுதாயத்தின் பெருமைக்குரிய ஒரு பகுதியாக அங்கீகரிக்க வேண்டிய அவசியத்தை, அரசாங்கத்திடம் வற்புறுத்தும் அதே நேரத்தில் இந்திய சாதுக்களின் தரத்தை மீண்டும் உயர்த்த ஆக்கபூர்வமான நடவடிக்கைகளையும் உடனடியாக எடுக்க வேண்டும். ஒரு சாது உண்மையில் ஒரு சாதுவாக இருக்க வேண்டும். அதாவது தியாகம், தூய்மை, ஞானம், சேவை இவற்றிற்கு ஒரு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டும்.

## 36. சாது சங்கம்

க்ஷேத்திரங்கள் தோறும் சாது சங்கம் தோன்றும். சுத்த நிவிர்த்தி மார்க்கம் மட்டும் ஒரு சிலருக்கே கைகூடும். தியானமும், படிப்பும் இருபத்தி நான்கு மணி நேரமும் முடியாது!

சாதுக்களுக்கும் வேறு பணி வேண்டும். சில வகைப் பணிகள் இளம் சந்நியாசிகளுக்குத் தேவை. இல்லாவிட்டால் தமோ குணம் ஆட்கொள்ளும். தன்னலமற்ற சேவை ஒரு சாதுக்குத் தேவை என்றார் சங்கரர்.

அந்தோ பாவம்! சில சாதுக்களே
உண்மை சங்கரத் தத்துவத்தை அறிவர்.
ஓரிரண்டு மணி நேரம் ஜபம், தியானம்
செய்யும் சாதுக்கள் சிலர் — மீதி நேரத்தை
அரட்டை அடிப்பர்;
நாளிதழ் படிப்பர்.
மாலைப் பொழுதில் சத்சங்கம் பெயரில்
அசத் விஷயங்களைப் பேசுவர்.
சில நேரங்களில் – 'உப்பில்லை, சப்பில்லை சத்திரச்
சாப்பாட்டில்' என்ற 'தத்துவங்கள்' பேசப்படும்!
வேறு நேரங்களில் ''அந்தச் சாமியார்
போலிச் சாமியார்''
என்ற பேச்சும், அரசியல், ரேடியோ நிகழ்ச்சிகள்
பண்பாக்கள் முதலியன பற்றிய விவாதங்கள்
பல மணி
நேரம் நடைபெறும்.

இத்தகைய ''சாது சங்கங்களை'' புனருத்தாரணம்
செய்வதே ''சாது சேவா சமிதி'' யின்
பணியாகும்.

## 37. சாதுக்கள் மறுமலர்ச்சி

குண்டர்கள் ஒழிப்பு உடனடித் தேவை !
அனைத்து சந்நியாசிகள் சாதுக்கள் ஒத்துழைப்பு
இதற்குத் தேவை !
எல்லா க்ஷேத்திர சாதுசங்கங்களும் சேருங்கள்
சேருங்கள் !
உண்மை ஆன்மீகத் தாபம் கொண்டவர்களை
போஷியுங்கள்
பால்ய சந்நியாசம் வேண்டாம் !
சாதுக்களையும் மற்றோரையும் பகுத்தறிதல்
கடினம்
''சுரத்தைக் காட்டிடும் சுரமானி'' போல்
சாதுத் தன்மையை அளந்து கண்டிட
''சாதுமானி'' என்று ஒன்று இல்லையே !
என் செய்ய !
பண்பாடுள்ள சாது உண்டு !
படிப்பறிவில்லா சாதுவும் உண்டு !
இளம் சாதுவும் இங்குண்டு !
முதிர்ந்த வயோதிக சாதும் உண்டு !
படிப் பறிவில்லா சாதுவிற்கு கல்வியறிவு
கொடுங்கள் !
வடமொழிக் கல்லூரி வளாகம் வேண்டும் !
ஹடயோகம், ஆயுர் வேதம், யோகம்,
வேதாந்தம் பயிலும் அமைப்புக்கள் அமைந்திட
வேண்டும்.
பயிற்சி பெற்றபின்;
அவர்களின் அனுபவங்கள் அறிவிக்கப்படும்.
முழு நேர சாதகர்கள் கிடைப்பர்.
தூய்மையான தியான யோகிகள் கிடைப்பர்.
பயிற்சிக்குப்பின், பிரச்சாரம் செய்யச் செல்வர்
சிலர்.

## 38. சாதுக்களின் அமைப்பு

சாதுக்களின் அமைப்பு உடனடித் தேவை. சாதுக்கள் சந்நியாசிகள் இவர்களைக் கொண்ட சீரிய அமைப்பு ஒன்று இருந்தால், அதிக அளவில் ஆன்மீக நற்பணிகளை நடத்தலாம். இப்பணி செய்யப் பட்டால் ஒரு புது யுகம், ஒரு புது உலகம், ஒரு புது கலாச்சாரம் மலரும்.

தனித் தனியாகச் சிதறிக் கிடக்கும் குழப்பமான ஒரு சமுதாயமாக சாதுக்கள் சமுதாயம் இருக்கிறது. பல்வேறு வகைகளும், பிரிவுகளும் இவர்களிடையே உளர். வைராகிகள், கபீர்பந்தாக்கள், கோரக் நாதர் சீடர்கள், அவதூதர்கள், விரக்தர்கள் ஆதி சங்கரரைப் பின்பற்றும் தசநாம சந்நியாசிகள், ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சந்நியாசிகள், நிரஞ்சன அகண்ட சந்நியாசிகள், நாகர்கள் மற்றும் பல வகை சந்நியாசிகள் உளர்.

சாதுக்கள், சந்நியாசிகள் இவர்களின் குடியிருப்பாக ரிஷிகேசம் விளங்குகிறது. ரிஷிகேசம், கங்கைக் கரையில் அமைந்த ஒரு அருமையான, கவர்ச்சிகரமான இடமாகவும், ஆன்மீகக் கதிரியக்கம் வீசும் இடமாகவும் அமைந்திருப்பதால் அதை சாதுக்கள் தங்கள் ஆத்ம சாதனத்திற்கும், தியானத்திற்கும் தேர்ந்தெடுத் திருக்கிறார்கள். பண்டைக் காலங்களில் ரிஷிகள் இங்கே தங்கி தவம் இயற்றி உள்ளனர். இமயத் திலுள்ள உத்தரகாசியும், ஹரித்துவாரமும், சாதுக்கள் பலர் வசிக்கும் மற்ற இடங்களாகும்.

ரிஷிகேசத்தில், சாதுக்களுக்கு இலவசமாக அமுது படைக்கும் இரண்டு முக்கியமான க்ஷேத்திரங்கள் உள்ளன. எங்கெல்லாம் உணவு

கிடைக்கிறதோ, அங்கெல்லாம் சாதுக்கள், கூட்டமாகக் கூடிவிடுகிறார்கள். எனவே சமுதாயக் கேடுகள் தலையெடுக்க ஆரம்பித்து, படிப்படியாக அந்த இடத்தின் புனிதத்தன்மை கெட்டுவிடுகிறது. இப்படிப்பட்ட புனித ஸ்தலங்களில், தொல்லை தருபவர்கள் பலர் இருந்து கொண்டு, தங்கள் கைவரிசையைத் தீவிரமாகக் காட்டி வருகிறார்கள்.

சாதுக்களின் பல்வேறு பிரிவுகளின் தலைவர்களுக்கு, சாதுக்களை ஒரு அமைப்பின் கீழ்க் கொண்டுவர வேண்டுமென்ற தீவிர அவா இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இந்தப் பணி செவ்வனே நிறைவேறும். அவர்கள் தங்களுடைய தனிப்பட்ட வித்தியாசங்களையும், அபிப்பிராயங்களையும் விட்டுவிட்டு, ஒன்று கூடி அமர்ந்து, முழு மனதுடன் பணி செய்ய வேண்டும். சாதுக்கள் அமைப்பை உருவாக்குவது அத்தனை சுலபமான காரியமல்ல. உண்மையில், அது மிகக் கடினமான, எளிதில் செய்ய முடியாத மாபெரும் காரியம். இந்த அமைப்பைச் சீராக நிறுவுவதற்கு சில காலம் பிடிக்கும்.

எல்லா மண்டலேஸ்வரர்களும், எல்லா மடங்களின் பீடாதிபதிகளும் மத நிறுவனத் தலைவர்களும், பொது மக்களிடையே செல்வாக்கு உடைய புகழ் பெற்ற சந்நியாசிகளும், சாதுக்களும் முன் வந்து, இந்தப் பணியை உடனடியாக மேற்கொள்ள வேண்டும். எந்த ஒரு தனிப்பட்ட சந்நியாசியாலும் இந்தப் பணியை நிறைவேற்ற முடியாது. ஆதி சங்கரருக்கு மன்னர்களின் ஒத்துழைப்பும், உதவியும் கிடைத்தன. பிரச்சாரத்திற்காக 'நாகர்கள் படை' என்ற ஒரு இராணுவ அமைப்பையே உருவாக்கினார். அதுபோன்று இந்தப் பணிக்கும், பண பலம்,

ஆள்கட்டு, படை பலம், தொண்டர்கள் குழாம் இவை தேவை.

தற்காலத்தில், பல விரும்பத்தகாத தீயவர்கள், காவியுடையில் சந்நியாசிகளிடையே உலவி வருகிறார்கள். இவர்களை அகற்ற வேண்டும். இவர்கள் பெரும் அளவில் தொல்லை கொடுக்கிறார்கள். சாதுக்கள் அமைப்பை உருவாக்குபவர்களுக்கு இத் தீயவர்களிடமிருந்து கடும் எதிர்ப்பு வரும். அதற்கு ஈடு கொடுக்க அமைப்பாளர்கள் தயாராக இருக்க வேண்டும். தீப்பொறி பறக்கும் பேச்சுக்களினாலும், உபன்யாசங்களினாலும் மட்டும் சாதுக்களை ஒன்று கூட்ட முடியாது. நல்ல திடகாத்திரமான, தன்னலமற்ற சோர்விலா அறிவாளிகள் தொண்டர்களாக வர வேண்டும். தாராள உள்ளம் கொண்ட நல்லவர்களின் உதவி நமக்குத் தேவை. அப்பொழுதுதான் நம் பணி வெற்றிகரமாக நிறைவு பெறும்.

இதுதான் சரியான நேரம். இப்பணியை உடனே எடுத்துக் கொள்ள வேண்டும். இப்பொழுது எல்லா மதத் தலைவர்களும் ஒத்துழைக்க வேண்டும். அப்பொழுதுதான் உலகில் உண்மையான ஆன்மீக எழுச்சி ஏற்படும்.

## 39. பாரதத்தில் சாதுக்களின் பணி

உண்மையான விரக்தி இல்லாமல், ஆனால் ஏதாவது ஒரு துரதிருஷ்டம் காரணமாகவோ அல்லது பெரும் துன்பம் காரணமாகவோ உலகைத் துறந்த சந்நியாசிகளும், மனித சமுதாயத்திற்கு ஏதாவது ஒரு வகையில் சேவை செய்ய வேண்டும். உண்மையான அருள் நாட்டம் கொண்ட சாதகர்கள் தங்களுடைய ஜபம், தியானம்,

சுவாத்யாயம், தபஸ் முதலியவற்றிற்கு தடை இல்லாமல் தங்கள் சாதனைகளை செவ்வனே பயில ஊக்குவிக்கப்பட வேண்டும் என்பதே எனது கருத்து.

அருட்தாகம் கொண்ட அவனுடைய நேரம் முழுவதையும் அல்லது சாதகனை அவனது நேரத்தின் பெரும் பகுதியை சமூக சேவையில் செலவிடும்படிக் கட்டாயப்படுத்துவது நமது பண்டைய கலாச் சாரத்திற்கு தீங்கு விளைவிப்பதாகும். சமூக சேவை செய்யக்கூடிய சாது ஒருவர், மகாத்மா காந்தி போன்று மிக உயர்ந்த ஆன்மீகப் பெரு நிலையை எட்டாமல் இருந்தால், விரைவிலேயே பொது மக்களின் மதிப்பை இழப்பதோடல்லாமல் சந்நியாசி வர்க்கத்தின் சிறப்பையே இழந்து விடுவார். பொது மக்களிடையே இடைவிடாமல் தொடர்பு கொள்ளக்கூடிய சாது, வழி தவறிப் போகும் அபாயமும் இருக்கிறது. ஆரம்ப நிலையிலோ அல்லது முன்னேறிய நிலையிலோ உள்ள சாதகர்களுக்கு, நான் எப்பொழுதுமே சொல்லி வந்துள்ள சேவை முறைகள் என்னவென்றால் மனம், ஒழுக்கம், ஞானம், ஆன்மீகம் முதலிய துறைகளில் செய்யப்படும் சேவைகளான ஆன்மீக ஞானத்தைப் பரப்புதல், மக்களை ஜபம் கீர்த்தனை முதலியவற்றில் ஈடுபடுத்துதல், மக்களை ஒழுக்க நெறியில் வாழும்படி உபதேசித்தல் முதலியன வாகும். நோயாளிகளுக்குச் சேவை செய்தல், ஏழை மக்களுக்குத் தொண்டு செய்தல், மற்றும் மக்களுக்குச் செய்யப்படும் பல்வேறு சமூக நல சேவைகளும், இந்த சாதகர்களின் அன்றாட ஆன்மீக நடைமுறையில் ஒரு அங்கமாக இருக்கும். அறிவுக்கு ஊட்டம் அளிப்பதும், மனிதனுடைய ஆன்மாவை போஷிப்பதும் சந்நியாசிகளின் தனிச் சிறப்புக் கடமைகள்.

உலக வாழ்க்கையின் சவாலே சமாளிக்க முடியாமல், உலகைத் துறந்த அரைகுறை சந்நியாசிகள் விஷயத்தில்கூட, அவர்கள் ஆத்ம ஞானத்தை அடைபவர்களாகவும், ஆன்மீகப் பிரச்சாரகர்களாகவும், உண்மையான சாதுக்களாகவும் மாற பயிற்சி அளிப்பேன்.

போலி வேஷக்காரர்கள், அயோக்கியர்கள் இவர்கள் விஷயம் வித்தியாசமானது. இவர்கள் சில நாட்கள் சாதுக்கள் உடையை போர்த்திக் கொண்டு அலேந்து திரிவார்கள். ஆனுல் இயற்கை அவர்களே விரைவில் காட்டிக் கொடுத்துவிடும். எல்லா சாதுக்களும், சந்நியாசிகளும், பிரபலமான, அங்கீகரிக்கப்பட்ட சாது நிறுவனங்கள் அல்லது குழுக்கள் இவற்றில் ஏதாவது ஒன்றில் பதிவு செய்து கொள்ள வேண்டுமென்ற கட்டாயத்தை ஏற்படுத்துவது இவர்களே அகற்றப் போதுமானது.

மனிதர்களின் புத்திக்கும், ஆன்மாவிற்கும், ஊட்டமளிக்கும் உண்மையான சாது, உலகிற்குச் சிறந்த சேவை செய்கிறுன். வேட்கை உடைய ஒருவர் உலகைத் துறக்கிறுர். நிவிர்த்தி மார்க்கத்தில் போராடுகிறுர். ஒரே நாளில் அவருக்கு ஞான ஒளி தெரிவதில்லே. நெடுங்காலம் அவர் கஷ்டப்பட்டு போராட வேண்டியுள்ளது. இந்த காலக் கட்டத்தில், உலகத்தார் கொடுக்கும் சிறிதளவு உணவிற்கும், மற்ற வசதிகளுக்கும் எந்தக் கைமாறும் செய்ய முடியாது. ஆனுல் அவரும் உலகிற்குச் சிறிதளவு வழங்குகிறுர். துறவிலும், தன்னலமற்ற தன்மையிலும்தான் ஆனந்தம் இருக்கிறது என்பதை அவர் உலக மக்களுக்கு வாழ்ந்து காட்டுகிறுர். பிறகு, அவருக்கு ஞான ஒளி தெரிந்தவுடன் அவர் உலகின் ஆன்மீகப் பசிக்கு சிறந்த விருந்தை வாரி வாரி வழங்குவார்.

இந்த விருந்திற்குக் கைமாருக உலகில் உள்ள செல்வத்தை எல்லாம் அளித்தால்கூட நிறைவாகாது.

பெற்ருேர்கள் குழந்தைக்கு உணவு அளித்து, உடை அளித்து, கல்வி அளித்து அவனை மனிதனுக வளரும்படிச் செய்கின்றனர். வளர்ந்த மனிதன் பெற்ருேர்களுக்கு நன்றிக்கடன் செய்கிருன். ஆன்மீக சாதகர்கள் அனைவரையும் மக்கள் தங்கள் பிள்ளைகளைப்போல் கருத வேண்டும். பண்டைய காலத்தில் மக்களின் நோக்கம் இப்படித்தான் இருந்தது. அதனுல்தான் அன்று சாதுக்கள் வளமாக வாழ்ந்தார்கள். பொதுமக்கள் இத்தகைய அன்புடனும், வாஞ்சையுடனும் சாதுக்களை நடத்திஞல், போலி சந்நியாசிகள்கூட நல்லவர்களாகி விடுவர் என நான் உறுதியாக நம்புகிறேன்.

## 40. ஓய்வு பெற்றவர்களுக்குச் செய்தி

ஓய்வு பெற்ற பின் நீங்கள் மகாத்மாக்களின் சத்சங்கம் பெற வாய்ப்புக்கள் உடைய பிரயாகை, ரிஷிகேசம் முதலிய க்ஷேத்திரங்களிலோ அல்லது புண்ணிய நதிகளாகிய நர்மதை, கங்கை, யமுனை இவற்றின் கரையில் உள்ள ஒதுக்குப்புறமான இடம் ஒன்றிலோ ஓரிரண்டு மாதம் வசிக்க வேண்டும். நீங்கள் தனிமையில் வாழ வேண்டும். உங்களுக்குச் சமைக்கத் தெரியாமல் இருந்து, ஒரு சமையல் காரரை வைத்துக் கொள்ள வசதியிருக்குமாஞல், ஒரு சமையல்காரரையும் உடன் வைத்துக் கொள்ளலாம். அப்பொழுதுதான் உங்களால் மோகம் அல்லது மனைவி மக்களிடம் உள்ள பாசம் இவற்றை ஒழிக்க முடியும். அப்பொழுதுதான் உங்களால் மனதை ஒருமுகப்படுத்தவும், முழுமை யான ஆன்மீக பயிற்சிகளில் ஈடுபடவும் முடியும்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு நீங்கள் வீடு திரும்பலாம். உங்கள் வீட்டிலிருந்து ஒரு மைல் தூரத்தில் தனித்து நீங்கள் வசிக்க வேண்டும். ஒரு சிறு குடிலை அமைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு இந்தக் குடிலுக்கு உணவு அனுப்பும்படி உங்கள் உறவினரைக் கேட்டுக்கொள்ளுங்கள். சில வேளைகளில் நீங்கள் உங்கள் வீட்டிலேயே சாப்பிடலாம். மீண்டும் கங்கைக் கரைக்கு வாருங்கள். இப்படிச் செய்வதன் மூலம் உங்கள் குடும்பத்தாருக்கு பிரிவு பழகிப் போய்விடும். அவர்களுக்கு அதிர்ச்சி இருக்காது. உங்களுக்கும் தனித்த வாழ்க்கையில் ஆன்மீகப் பயிற்சி அனுபவம் கிடைக்கும். காலப் போக்கில் வருஷக்கணக்காக நீங்கள் எந்தவிதக் கஷ்டமும் இன்றி தனிமையில் இருக்க முடியும். தனிமையில் வாழும் பொழுது யாருக்கும் கடிதம் எழுதாதீர்கள். உங்கள் ஓய்வு ஊதியத்தை தர்மத்திற்குச் செலவிடுங்கள். ஜபம், தியானம், சுவாத்யாயம், கீர்த்தனை, பிராணு யாமம் இவற்றில் மூழ்குங்கள். தினசரி ஒழுங்கு முறையை ஏற்படுத்திக் கொண்டு, அதை விடாப் பிடியாகப் பின்பற்றுங்கள். உங்களுக்கு ஆச்சரிய மான ஆன்மீகப் பயன்கள் கிடைக்கும்.

வயோதிகப் பெரியவரே! உங்கள் வாழ்நாளின் கடைசிப் பகுதியைக் கூட தெய்வீகச் சிந்தனை, பஜனை, வழிபாடு இவற்றில் உபயோகப்படுத்தா விட்டால், மானிடப் பிறவி எடுத்து என்ன பயன்? மானிடப் பிறவி எடுப்பது மிக அரிது. ஆழ்ந்த அறியாமைத் துயிலிலிருந்து எழுமின்! ஆன்மீகப் பயிற்சியை உடனே மேற்கொள்ளுங்கள். தன்னை உணர்ந்து, இப்பிறவியிலேயே மோக்ஷம் அடையுங்கள்.

## 41. எல்லோருக்கும் பொருந்தும் மதத்தின் சாரம்

பசித்தவனுக்கு உணவு அளி. ஆடை அற்றவனுக்கு உடை கொடு. இருப்பிடம் இல்லாதவனுக்கு வீடு கொடு. படிப்பறிவு இல்லாதவனுக்கு கல்வி அளி. நோயாளிகளுக்கு வைத்தியம் செய். பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதல் சொல். துக்கம் அடைந்தவர்களுக்கு அனுதாபம் தெரிவி. பிறர் கஷ்டத்தைக் குறை. பாபப்பட்டவர்களின் கண்ணீரைத் துடை. மற்றவர்களை மகிழ்ச்சியாகவும், ஆனந்தமாகவும் வைத்திருக்க ஆவன அனைத்தையும் செய்.

ஊரோடு ஒத்து வாழ். அனுசரித்து வாழ். அவதூரைப் பொறுத்துக் கொள். இதுதான் மிக உயர்ந்த சாதனை. ''நான் யார்?'' என்ற விசாரம் செய். உன்னை உணர்ந்து மோக்ஷம் அடை. சேவை செய். அன்பு செய். கொடை அளி. தூய்மையாகு. தியானம் செய். உணர்ந்து கொள். நல்லவனுயிரு. நல்லது செய். அன்பாயிரு. அனுதாபப்படு.

## 42. ஆன்மீக மையங்கள் அமைத்தல்

பிரபஞ்சம் முழுவதும் எங்கு பார்த்தாலும் ஒழுங்கு முறை இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் மேலான ஒரு அரசர், ஒரு ஆட்சியாளர் அல்லது ஒரு சக்தி அல்லது கடவுள் இருக்கிறது என்பதற்கு இது ஒன்றே நிரூபணமாகிறது. மகரிஷிகளும், ஜகத் குருக்களும், மனுக்களும், பிரஜாபதிகளும், இந்த உள்ளாட்சியின் நிர்வாகிகளே. இந்திரன், வருணன், அக்னி, வாயு இவைகளும் இந்த ஆட்சியில் பங்கு கொள்கின்றனர்.

அகிலத்திலுள்ள அனைத்துப் பொருட்களையும் நீங்கள் பார்க்கிறீர்கள். நீங்கள் யாண்டும் காண்பவர். காணப்படும் பொருட்கள் எப்பொழுதும் மாறிக் கொண்டேயுள்ளன. ஆனால் காண்பவராகிய சாட்சி ஒருபொழுதும் மாறுவதில்லை. இந்த மௌன சாட்சிதான் அழிவற்ற, தானே ஒளி வீசுகிற, தன்னகத்தோ அனைத்தையும் கொண்டுள்ள உண்மையான, அளப்பரிய ஆத்மா. மாயையிலிருந்து விடுபட்டது. கடவுள் சகுண பிரம்மம். ஆண்டவன் சக்தி சொரூபம். ஆன்மாவின் உட்பொருள். ஆண்டவனும், ஆன்மாவும் ஒன்றே அன்றி வேறல்ல. சக்தியையும் உட்பொருளையும் பிரிக்க முடியாது. ஆன்மா மாயை என்ற போர்வையில் கடவுளாகவும், புவனமாகவும் தெரிகிறது.

தன்னை உணர்வதே உண்மையான மதம். உண்மையான மதம் புலன்களுக்கும் புத்திக்கும் அப்பாற்பட்டது. உண்மை மதம் என்பது ஆன்மாவில் யாண்டும் உறைவது. மதத்தில் தேவையானவைகளும், தேவையற்றவைகளும் இருக்கின்றன. எல்லா மதங்களின் அடிப்படைகளும் சாரமும் ஒன்றே. மக்கள் உண்மையான மதத்தை மறந்து விட்டார்கள். அவர்கள் சம்பிரதாயங்கள், சடங்குகள் இவைகளை மட்டுமே கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே அவர்கள் அழிவற்ற ஆனந்தத்தையும், ஒப்பற்ற சாந்தியையும் அனுபவிக்க முடியவில்லை. அவர்கள் எப்பொழுதும் அமைதியில்லாமலும், திருப்தியில்லாமலும், ஒழுக்கமற்றும் இருக்கிறார்கள்.

சமுதாய அரசியல் சுதந்திரம் மட்டும் மனித குலத்திற்கு முழுமையான சாந்தியையும் ஆனந்தத்தையும் அளிக்க முடியுமா?. நிச்சயமாக முடியாது.

செல்வம், அதிகாரம், பெயர் உலகில் கிடைக்கக் கூடிய எல்லாப் புகழ், ஆடம்பரங்கள் இவை உங்களுக்கு அழிவற்ற ஆனந்தத்தைத் தரமுடியாது. அழிவற்ற ஆனந்தத்தையும், முழுமையான சுதந்திரத்தையும், அமரத்துவத்தையும் நீங்கள் ஆன்மாவில் மட்டுமே காணமுடியும். தூய்மை, மன ஒருமைப்பாடு, தியானம் முதலியன மூலம் நீங்கள் மேற்கூறியவற்றை ஆன்மாவில் காணலாம்.

மதத்தையும், அரசியலையும் பிரிக்க முடியாது. அரசியல் என்பது ராஜதர்மம் அல்லது ராஜநீதி. அருட்தாகம் கொண்டவர்களுடைய லௌகீகத் தேவைகள் நிறைவேற்றப்பட்டு, அவர்களுடைய தேசத்தை ஆட்சி செய்பவர்கள் அல்லது மன்னர்கள் அருள்தாகம் கொண்டவர்களையும், சாதுக்களையும், சந்நியாசிகளையும் பேணிப் பாதுகாத்து நாட்டில் அமைதி நிலவும்பொழுதுதான் மக்கள் மதத்தைக் கடைபிடிக்க முடியும். நாட்டில் அமைதி நிலவினால்தான் முனிவர்களும், தீர்க்கதரிசிகளும் ஆன்மீகக் கருத்துக்களைப் பரப்ப முடியும். தண்டகாரண்ய வனத்தில் தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகளுக்குத் தொல்லை கொடுத்த அரக்கர்களை அழிக்க ஸ்ரீ ராமபிரானுடைய உதவியை விஸ்வாமித்திரர் கேட்கவேண்டி வந்தது.

பொருளாதார, அரசியல், சமூக சீரமைப்பு இந்தியாவிற்கு இப்பொழுது தேவை. ஆனால் இதுமட்டும் போதாது. மக்களுக்கு ஒழுக்கம், மனம், ஆன்மீகம் இவற்றைப் பற்றிய பண்பாட்டையும் அளிக்க வேண்டும். அப்பொழுதுதான் தேசத்தில் எங்கும் இணக்கமும் சாந்தியும் நிலவும். எல்லாப் பண்பாடுகளுக்கும், எல்லா இயக்கங்களுக்கும் அடிப்படை ஆன்மாவே. வாழ்க்கையில் உயர் குறிக்கோள் ஆன்மாவை அறிவதே.

உலகில் இத்தனை போர்கள் ஏன்? ஏனென்றால், ஆடம்பரமான வாழ்க்கை வாழ்வதற்கு மக்களுக்குப் பெரும் செல்வம் தேவையாயிருக்கிறது. அவர்களுக்கு அதிகாரம் தேவைப்படுகிறது. ஒரு சாரார் மற்றவர்களை அடக்கி ஆள விரும்புகிறார்கள். முக்குணமயமான இவ்வுலகில், சண்டைகளும் சச்சரவுகளும் அவ்வப்பொழுது ஏற்படுவது இயற்கை. பேராசையும், தன்னலமும் தலைதூக்க முயற்சி செய்யலாம். அப்பொழுது வெளிநாட்டு ஆக்கிரமிப்பாளர்கள் இந்தியாவிற்குள் பிரவேசித்து நம்மைத் தாக்குவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அத்தகைய சூழ்நிலைகளில் நம்மைக் காக்க நமக்கு ராணுவம் தேவை. ராணுவம், கடற்படை முதலியவற்றை இந்தியா தற்காப்பிற்காக வைத்திருக்கும்; வைத்திருக்க வேண்டும். ஸ்ரீசங்கரர்கூட, தற்காப்பிற்கும், பாதுகாப்பிற்கும் நாகசாதுக்கள் அடங்கிய படையொன்றை வைத்திருந்தார். ஆனால் இப்படையின் பின்னணியாக அஹிம்சை பலம் மட்டுமே இருந்தது. உண்மையான அஹிம்சை மட்டுமே இத்தகைய இக்கட்டான சூழ்நிலைகளில் நமக்கு உதவும். ஆனால் மக்கள் அனைவரையும், அஹிம்சை வழியில் பழக்குவது கடினம். வேதாந்தம், தெய்வநெறி வாழ்க்கை, தூய்மையான அன்பு, விஸ்வபிரேமை, இவற்றை முறையாகக் கடைப்பிடித்தால், எல்லா மக்களையும் ஒன்றுபடுத்தி, இணக்கத்துடனும், இசைவுடனும், அமைதியுடனும் வாழும்படி உண்மையிலேயே செய்ய முடியும். பெயர்களையும், உருவங்களையும் மட்டுமே பார்ப்பதால், இந்துக்களும், முகம்மதியர்களும் சண்டையிட்டுக் கொள்கிறார்கள். இன்றுமுதல் நீங்கள் ஒவ்வொருவரும் உண்மையான வேதாந்தி என்ற எண்ணம் கொள்ளுங்கள். அப்பொழுது யுத்தம் இருக்காது. எவ்வகை பிற நாட்டவர் படையெடுப்பும் இராது.

தன்னலமற்ற தன்மையை நீங்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். நற்பண்புகள் பலவற்றை நீங்கள் விருத்தி செய்து கொண்டு, படிப்படியாக நிவிர்த்தி மார்க்கத்தில் செல்வதற்கும் தயார் படுத்திக் கொள்ள வேண்டும். ஒருவன் 25 வயது வரை பிரம்மச்சரியத்தைக் கடைபிடித்து விட்டு, இல்லறத்தை மேற்கொண்டு, அறவாழ்க்கை வாழ வேண்டும். இருபத்தி ஐந்து ஆண்டுகள் இல்லற வாழ்க்கையை நடத்தி விட்டு அல்லது தங்கள் குழந்தைகளின் வாழ்க்கை, ஒரு நிலையான கஷ்டத்தை அடைந்தவுடன், கணவனும், மனைவியும் வானப்பிரஸ்த ஆஸ்ரமத்தை மேற்கொண்டு தங்கள் நேரத்தை ஆன்மீக நூல்களைக் கற்பதிலும், தனிமையில் தியானம் செய்வதிலும் செலவிட வேண்டும். இதன் பிறகுதான் உண்மையான சந்நியாசம் வருகிறது. இப்பொழுது அவர்கள் தனியாகவோ அல்லது சேர்ந்தோ வாழலாம். இவைகளில் அவர்கள் எது வசதி, எது சரியென்று கருதுகிறார்களோ அதை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அஹிம்சை, தைரியம் இவை இரண்டும்தான் ஒரு சந்நியாசியின் ஆயுதங்கள். ஆனால் அஹிம்சை என்றால் என்ன என்பதை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். எண்ணம், சொல், செயல் இவற்றில் முழுமையாக அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒரு சந்நியாசியும், ஒரு கர்மயோகியும் ஒரே நிலையில்தான் இருக்கின்றனர். இருவரும் உண்மையான தியாக வாழ்க்கையை வாழ வேண்டும்.

உண்மையான சந்நியாசம் இல்லாமல் உலகாயத சுதந்திரம் கூடக் கிடைக்காது. நீங்கள் பயமற்றவராக இருக்க வேண்டும். பொறுமை, வலிமை, சகிப்புத்தன்மை முதலியனவற்றை நீங்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். எளிமையான

வாழ்க்கையை நீங்கள் வாழ வேண்டும். ஆன்மீக விடுதலை அல்லது முக்தி அல்லது அத்யாத்மிக சுயராஜ்யம் வேண்டுமென்றால் நீங்கள் இன்னும் அதிக அளவில் தியாகம் செய்ய வேண்டும்.

சாதுக்களையும், சந்நியாசிகளையும் ஒரு ஆன்மீக அமைப்பின் கீழ்க் கொண்டுவர வேண்டுமென்று மக்கள் கோருகிறார்கள். மக்கள் பொதுவாகக் கூறுவது என்ன வென்றால்:—

''நன்று, மோக்ஷம் வேண்டுமென்ற ஆசை எங்களுக்குள் கொழுந்து விட்டு எரிகிறது. ஆனால் எங்கு செல்வது? யார் எங்களுக்கு வழி காட்டுவார்? மத ஈடுபாடு உள்ள எங்கள் குமாரர்கள் ஆன்மீக மார்க்கத்தைப் பின்பற்ற வேண்டும் என நாங்கள் விழைகிறோம். ஆனால் நல்ல ஆன்மீக நிறுவனங்கள் இப்பொழுது இல்லையே! ஆன்மீகத் துறையைச் சேர்ந்த பெரிய யோகிகள் அல்லது மகாத்மாக்கள் நிறுவிய பெரிய ஸ்தாபனங்களில் பயிற்சி பெறலாம் என்ற பெரும் நம்பிக்கையோடு அமெரிக்கா, ஐரோப்பா, ஜெர்மனி முதலிய அயல் நாட்டைச் சேர்ந்த பலர் இந்தியா வருகின்றனர். அவர்கள் ரிஷிகேசம், நாசிக், பிரயாக், காசி முதலிய நகரங்களுக்கு வருகின்றார்கள். ஆனால் சில அவதூதர்கள், மௌன சாமிகள் இவர்களையே இந்த வெளி நாட்டவர்கள் பார்க்கிறார்கள். இந்த சந்நியாசிகள் மௌன விரதம் மேற்கொண்டவர்கள். எனவே வெளி நாட்டவர் முற்றிலும் ஏமாற்றமடைகிறார்கள். என்னே பரிதாபமான நிலை!

அனுபூதிமான்கள், நன்கு இயங்கும் ஆன்மீக நிறுவனங்கள் இவை மிகக் குறைவான எண்ணிக் கைகளில் இருந்த பொழுதிலும், எல்லா சாதுக்கள்,

சந்நியாசிகள், ஆன்மீக நிறுவனங்கள் இவைகளை ஒருங்கிணைக்க வேண்டியது உடனடி தேவை. இது இன்றியமையாத தேவை. சாதனைகளை முடித்தவர்கள், தாங்கள் தவம் செய்த ஒதுக்குப்புறமான மலை அல்லது வனாந்திரப் பகுதிகளிலிருந்து இறங்கி, மக்கள் வாழும் சமவெளிக்கு வந்து உண்மையான, உருப்படியான, முறையான ஆன்மீகப் பணிகள் சிலவற்றை நல்ல அடிப்படையில் செய்ய வேண்டும். மாநிலத் தலைநகரங்கள், நகரங்கள் ஒவ்வொரு மாவட்டம் இவைகளில் எல்லாம் ஆன்மீக மையங்கள் தொடங்கப்பட வேண்டும். சதாச்சாரம், தியானம், யோகம் இவற்றில் மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். நன்கு பயிற்சி பெற்ற யோகிகளும், செய்முறை வேதாந்திகளும், யோகம், வேதாந்தம் இவற்றை முறையாகப் பயிற்றுவிக்க வகுப்புகள் நடத்த வேண்டும். இப்படி நன்கு பயிற்சி அளிக்கப்பட்டவர்கள் சிறப்பாக தயாரானவுடன் அவர்களை வெளி நாடுகளுக்குப் பிரச்சாரகர்களாக அனுப்ப வேண்டும். இதற்குத் தலைமை அலுவலகம், ரிஷிகேசத்திலோ அல்லது அது போன்ற வேறு ஒரு இடத்திலோ அமைய வேண்டும். இந்த வகையில் ஒரு பிரம்மாண்டமான ஆன்மீகப் பல்கலைக் கழகத்தைச் சுலபமாக நிறுவி விடலாம். உலகம் முழுமைக்கும் இது ஒரு ஆன்மீக சக்தி மையமாகத் திகழும். இந்தத் திட்டம் நன்கு செயல்பட்டால், ஒரு நல்ல இந்தியா உருவாகும். ஏன் ஒரு நல்ல உலகமே உருவாகும். இதில் சந்தேகமில்லை. இவ்வுலகம் ஒரு சொர்க்கமாகத் திகழும். எங்கும் சமாதானம் நிலவும். யுத்தம் இருக்காது. ஆன்மீக ஞான ஒளியினால் அறியாமை இருள் அழியும். பொற்காலமாகவும் இது அமையும்.

70 லட்சம் சாதுக்கள் என்று மக்கள் தொகை அறிக்கை கூறுவது தவறு. சந்நியாசிகள், சாதுக்கள் இவர்களின் பட்டியலில் பிச்சைக்காரர்களையும் சேர்த்திருக்கிறார்கள். உண்மையான சந்நியாசிகள் அரிது. அவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். ஒரு உண்மையான சந்நியாசி தான் இந்த உலகின் சக்திவாய்ந்த வல்லுநர். சந்நியாசி எதையும் பெறுவதில்லை. ஆனால் எப்பொழுதும் வாரி வழங்கிக் கொண்டே இருப்பார். கடந்த காலத்தில் புகழ்பெற்ற விழுமிய காரியங்களைச் செய்தவர்கள் சந்நியாசிகளே. சந்நியாசிகளால்தான் நிகழ்காலத்திலும், வருங் காலத்திலும் அதிசயமான பணிகளைச் செய்ய முடியும். உலகம் உள்ள அளவும் ஸ்ரீ சங்கரரின் புகழ் மங்காது. சாஸ்திரங்களின் விழுமிய போதனைகளைப் பரப்பி இந்து தர்மத்தைக் காப்பாற்றியவர்கள் யார்? சுவாமி தயானந்தர், சுவாமி விவேகானந்தர், சுவாமி ராமதீர்த்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இவர்கள்தானே! ஒரு சந்நியாசியால் மட்டுமே உலக நன்மைக்காகப் பாடுபட முடியும். ஏனென்றால் சந்நியாசிக்குத்தான் தெய்வீக ஞானம் உள்ளது. அவர்தான் முழுநேர மனிதன். உலகத்தின் தலை எழுத்தை ஒரே ஒரு உண்மையான சந்நியாசியால் மாற்ற முடியும். அத்வைத தத்துவத்தை நிறுவிய சங்கரர் என்ற ஒரு தீரர்தானே! சங்கரர் இன்னும் நம் உள்ளத்தில் வாழ்கிறார். பரமஹம்சர்கள், சில சப்பாத்தித் துண்டுகளைச் சாப்பிட்டுக் கொண்டு அதற்குப் பதிலாக வேதம், உபநிஷதம், ராமாயணம், பாகவதம் முதலியவற்றில் புதைந்துள்ள சீரிய உண்மைகளை, வீடு வீடாகச் சென்று இந்தியா முழுதும் பரப்பினார்கள். உலகம் அவர்களுக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறது. அவர்களுடைய நூல்கள் இன்றும் நமக்கு வழிகாட்டிகளாக விளங்கு

கின்றன. அவதூத கீதையில் சில சுலோகங்களை அல்லது பாக்களைப் படித்துப் பாருங்கள். உடனடியாக நீங்கள் தெய்வீகப் பெருமைக்கும், கீர்த்திக்கும் உயர்த்தப்படுவீர்கள். நீங்கள் முற்றிலும் மாறிய மனிதனுகி விடுவீர்கள். மனத் தளர்ச்சி, பலவீனம், கவலைகள் மறையும்.

சந்நியாசிகளின் தேவைகளைக் கவனித்துக் கொள்வது இல்லறத்தார், ஜமீன்தார்கள், ராஜாக்கள், மகாராஜாக்கள் இவர்களின் கடமை. இதற்குக் கைமாருக சந்நியாசிகள் மக்களுடைய ஆன்மீகத் தேவைகளைப் பூர்த்தி செய்வர். உலக இயக்கம் தங்கு தடங்கலின்றி நடைபெறும். உலகில் அமைதி நிலவும்.

தனித்து வாழ்ந்து, தியானம் செய்து கொண்டிருக்கும் பரிவ்ராஜகத் துறவிகள் எல்லா மதத்திலும் உண்டு. புத்தமதப் பிட்சுகள், முகம்மதிய பக்கிரிகள், சுபி மதப் பக்கிரிகள், கிறிஸ்துவ மதப் பாதிரிகள், போதகர்கள் முதலியோர் இதில் அடங்குவர். உலக சமயங்களைக் காத்து, ரக்ஷிப்பது இவர்களே. இல்லறத்தார்கள் கஷ்டங்களிலோ, துயரத்திலோ இருந்தால் அவர்களுக்கு ஆறுதல் அளிப்பது இவர்களே. தெய்வீக ஞானத்தையும், சாந்தியையும் அளிப்பவர்கள் இவர்களே! ஆன்மீக ஞானத்தையும், சொர்க்க லோகச் செய்திகளையும் கொண்டு வரும் தூதுவர்களும் இவர்களே! அத்யாத்மிக அறிவியலையும், உபநிஷங்கள் வெளிப்படுத்தும் உண்மைகளையும் கற்பிப்பவர்கள் இவர்களே! இவர்கள் நோயுற்ருேருக்குச் சேவை செய்கிருர்கள். அமைதி இழந்தவர்களுக்கு ஆறுதல் அளிக்கின்றனர். நோய் வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடப்பவர்களுக்கு தொண்டு செய்கின்றனர். வேதாந்த ஞானத்தைப்

போதித்தும், ''த த் வ ம ஸி'' என்ற மகா வாக்கியத்தின் உட் பொருளை விளக்கியும், இவர்கள் நம்பிக்கை இழந்தவர்களுக்கு ந ம் பி க் கை நக்ஷத்திரமாக விளங்குகிறார்கள். மனச் சோர்வு அடைந்தவர்களுக்கு மகிழ்ச்சியை வழங்குகிறார்கள். பலவீனர்களுக்கு பலம் அளிக்கிறார்கள். பயந்தவர் களுக்கு தைரியம் ஊட்டுகிறார்கள்.

அரசியல் சு த ந் தி ர ம் பெற்றுவிட்டோம். ஆனால் அரசியல் சுதந்திரத்தினால் மனிதனுக்கு உண்மையான, நிலையான சாந்தியையும், விடுதலை யையும் அளிக்க முடியுமா? இந்த அரசியல் சுதந்திரம் மனிதனின் கஷ்டங்களையும், அறியா மையையும் முழுமையாக நீ க் கு ம ா? இந்த அ ர சி ய ல் சுதந்திரத்தினால் உண்மையான வாழ்க்கைப் பிரச்சனைகளைத் தீர்க்க முடியுமா? அரசியல் சுதந்திரம் மனிதனுக்குச் சிறிதளவு அ தி க ம ா ன சௌகரியங்களைக் கொடுக்கும் அவ்வளவுதான். அவனுக்கு அதிகமான சோறும், பாலும், பழமும் கிடைக்கும். ஆனால் மனிதனுக்கு ஆத்ம ஞானம் இல்லாததினாலும், அவன் இன்னமும் அறியாமையில் மூழ்கி இருப்பதினாலும், இன்னமும் துன்பத்திலும், துயரத்திலும் உழல்கிறான். ஆன்ம ஞானமே உண்மையான, நிலையான மகிழ்ச்சி யையும், அழியா ஆனந்தத்தையும் தரமுடியும். ஆன்ம ஞானம், அதாவது மனிதன் தன்னை அறிந்து கொள்வதே அவனை உண்மையான சுதந்திர புருஷனாகவும், அமரனாகவும் செய்ய முடியும்.

அரசியல் துறையில் பணியாற்றுபவர்களும், கீதை உபநிஷதம் இவற்றின் வழிநடக்க வேண்டும். அவர்கள் அரசியல் துறையில் பிரவேசிப்பதற்குமுன் அவர்கள் ஒழுக்கநெறி, தன்னலமற்ற தன்மை, ஆன்மீகத்துறை முதலியனவற்றில் பயிற்சி பெற்று

தன்னுடைய உண்மை நிலையை அறிந்தவர்களாக இருக்க வேண்டும். பதஞ்சலி முனிவர் கூறிய இயமம், நியமம், மற்றும் கீதை கூறியுள்ள மனம், வாக்கு, காயம் இவை பற்றிய மூன்று வகைத் தவம் இவற்றைக் கடைப் பிடிப்பவர்களாக அரசியல்வாதிகள் திகழ வேண்டும். உலக மக்கள் அனைவரும் ஒரு குடும்பத்தினர் என்பதை அவர்கள் அறிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் தங்களுக்கும், தங்கள் நாட்டிற்கும் உண்மையான சேவை செய்ய முடியும்.

சாதுக்கள், சந்நியாசிகள் பற்றிய நடைமுறைகளை முழுமையாகச் சீரமைக்க வேண்டும். அவர்களை ஆன்மீக வாரியம் சம்ரக்ஷிக்க வேண்டும். கோவில்கள் மற்றும் அறநிலையங்களுக்கு அளிக்கப் படும் கட்டளைகள், சொத்துக்கள் முதலியவை ஒரு சமய வாரியத்தால் நிர்வாகம் செய்யப்பட வேண்டும். இப்பொழுது பணம் ஏராளமாகப் பல வழிகளில் விரயம் செய்யப்படுகின்றன. திறமையான பொருளாதார கட்டுப்பாட்டினால் மட்டுமே, மத நிறுவனங்களை நல்ல முறையில் நிர்வகிக்கவும், உண்மையில் திறமையான போதகர்களைப் பயிற்றுவிக்கவும், பொதுமக்களுக்கு நல்ல ஆன்மீக நன்மை செய்யவும் முடியும்.

இதோ ஓர் அசரீரி கேட்கிறது: ''சந்நியாசிகள் இந்தப் பணியை மேற்கொள்ள வேண்டும். பரஸ்பரம் ஒத்துழைத்தால் தங்கு தடையின்றி வெற்றிப் பாதையில் சென்று விரைவில் வெற்றியை அடையலாம். ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்வதின் மூலம், இந்தப் பணியை முடுக்கி விட்டு, நல்ல திறமையான பலனை எதிர்பார்க்கலாம். இந்தப் பணியை உடனடியாக சந்நியாசிகள் மேற்கொள்ளட்டும். வாய்மையே வெல்லும், பொய்மை அல்ல''.

## 43. நான் கண்ட தர்மம்

சகிப்புத்தன்மை, புண்ணியம், அன்பு, தூய்மை என்ற மலர்கள் பூத்துக் குலுங்கும் பூங்கா நம் இந்திய நாடு. உலக மக்களின் சகோதரத்துவம், மனிதகுல ஒற்றுமை என்ற விதைகளிலிருந்து முளைத்த மரத்தில் பழுத்த கனிகள்தான் ஆன்மீகமும் தெய்வீக ஞானமும். தனது பெருமை வாய்ந்த பாரம்பரியத்தினுல் இந்தியா அனைவருக்கும் அழிவில்லா ஆனந்தத்தைக் கொடுக்கும் சரியான பாதையைக் காட்ட முடியும். இந்திய தேசியத் தகுதியும், ஆன்மீகப் பண்பாடும், நிலையான சாந்தி மற்றும் ஆக்க பூர்வமான பெருமை இவற்றைக் கொடுக்கும்.

இந்தியா தர்ம தேசம். அதன் மூச்சே தர்மம். அதன் உயிரும், ஒளியும் தர்மம். அது தர்மத்திலே செயலாற்றுகிறது. இந்தியா தர்மத்தைக் காப்பாற்றுகிறது. தர்மம் இந்தியாவைக் காப்பாற்றும்.

ஸ்ருதி ஸ்மிருதி இவற்றில் கூறப்பட்டுள்ள சமுதாயக் கட்டுப்பாடுகளும், வெளியுலக நடவடிக்கைகளும் உலகாயத நாகரிகத்தினுல் பீடிக்கப் பட்டிருக்கும் தற்கால உலகில் பின்பற்றுவது அத்தனை சுலபமல்ல. இருந்த பொழுதிலும், பழையனவற்றை எதிர்த்துப் புரட்சி செய்யும் ஒருவன் அவைகளில் உள்ள ஆன்மீகத் தகவுகளை முழுமையாகப் புறக்கணித்து குருட்டுத்தனமான உலகாயத வாழ்க்கையைக் கடைப்பிடிப்பதில் அர்த்தமில்லை. கடந்த காலத்தில் உள்ள சிறப் புக்கள், தற்காலச் சிறப்புகள் இவை இரண்டையும் உள்ளடக்கிய ஒரு சிறந்த நடுவழி இருக்கலாம். வாழ்க்கையிலிருந்து தத்துவபூர்வமாகத் தங்களை ஒதுக்கிக்கொண்டு, ஆனுல் வாழ்க்கையின் மேல் உணர்ச்சிவசப்படாமல், அன்பு கொண்டு, அதை

முழுமையாக அலசிப்பார்க்க நேரமும், பயிற்சியும் பெற்ற மகான்கள், மகரிஷிகள் இவர்களின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

எல்லா தேசங்களும் பகைமை, போர், அபிப்ராய வித்தியாசங்களை ஒரு முடிவுக்குக் கொண்டு வர வேண்டும். தர்மம் என்பது ஒரு குறிப்பிட்ட வகுப்பினரின் சொத்து அல்ல. உலகம் முழுவதற்கும் அடிப்படையாகவும், அதன் இயக்கத் திற்குக் காரணமாகவும் இருக்கும் அழியா நியதியே தர்மம். கர்மம், பிறப்பு, இறப்பு, புனர் ஜன்மம் இவற்றின் பிரதி பலன்களின் ''விளைவு — எதிர் விளைவு நியதி''. புவனத்தில் நடைபெறுவன அத்தனையும், பல வகைகளில் ஒழுங்குமுறைப்படி நடைபெறுகிறது. இந்த நீதிகளை இயக்கி வைக்கும் சூத்திரதாரிதான் தர்மம் எனப்படுகிறது. பெற்றோர்கள், ஆசிரியர்கள், மற்றும் தன்னலமற்ற சமூக சேவகர்கள் மக்களின் நடத்தையை உருவாக்குகிறார்கள். இவர்களே தர்மத்தின் தூண்கள்.

''ஏகம் சத்விப்ரா பகுதா வதந்தி,'' (உண்மை ஒன்றே. அறிஞர்கள் அதைப் பல பெயர்களில் அழைக்கிறார்கள்) அஹிம்சை, சத்தியம், பிரம்மச் சரியம், அன்பு, சகோதரத்துவம் இவற்றின் பொருளும் இதுவே. உலகத்தின் நாடித் துடிப்பையே கட்டுப்படுத்துவது தர்மம்தான்.

## சிறப்பான நடத்தையே தர்மம்

ஸ்ரீ ராமபிரான், தர்மபுத்திரர், விக்ரமாதித்தர் இவர்கள் அழியா தர்மத்தின் பிரதிநிதிகள். இவர்களின் அமர வாழ்க்கை, ஒரு தேசத்தின் நல்வாழ்வாக அமைகிறது. உயர்ந்த ஆன்மீக பலனை அடையும் வகையில் நமது வாழ்க்கையை வழி நடத்தும் முறையே தர்மம். புனித தர்மம்

என்பது என்ன? மனிதனின் உள்ளே மறைந்திருக்கும் சக்தியையும், செயல் திறங்களையும் வாழ்ந்து காட்டுவதும், அவற்றைப் பரிணமிக்கச் செய்வதும், தெய்வீகத் தன்மையை அடைவதும் மனித தர்மம். அமரத்துவம், நிர்வாண சுகம் இவற்றைக் காட்டிக் கொடுப்பதே தர்மம். சிந்தனை, சொல், செயல் இவைகள் மூலமாகத்தான் தர்மத்தை அடைய முடியும். தெய்வநெறி வாழ்க்கையே தர்மம். சீரிய ஒழுக்கமுடைய அறவாழ்க்கையே தர்மம். ''ஆத்மாவத் சர்வ பூதானி'', (தன்னைப்போல் அனைவரையும் நேசிப்பதே தர்மம்).

மனித சேவையை மகேசன் சேவையாகச் செய்வதே தர்மம். கொடை அளிப்பது தர்மம். அடக்கம், புலனடக்கம், தூய உள்ளம், ஞானம், கடவுள் சிந்தனை இவை மிக உயர்ந்த வகை தர்மங்கள். அறவாழ்க்கையே தர்மம்.

தர்மத்தின் சின்னம் ஆசாரம் அல்லது நன்னடத்தை. நன்மையின் சின்னம் ஆசாரம். ''ஆசார பிரபவோ தர்ம'' (தர்மம் வாழ்க்கையை மேம்படுத்துகிறது). தர்மத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் இம்மையிலும், மறுமையிலும், மனிதன் சிறப்பையும், பெருமையையும், பெற முடியும். நன்னடத்தையே மிக உயர்ந்த தர்மம். இதுவே எல்லா தவங்களின் ஆணிவேர். மனிதனுக்கு நன்மை பயப்பது தர்மம். தர்மம்தான் உலகைத் தாங்குகிறது. மக்களைப் பராமரிப்பதும் தர்மமே. அழிவில்லா ஆனந்தத்தையும், அமரத்துவத்தையும் அளிப்பது தர்மம்.

மதத்திற்கு நுழைவாயில் ஒழுக்கம். ஒழுக்கத்தின் அடிப்படையில் அறவாழ்க்கை வாழ்பவனுக்கு, நிறைவான சுதந்திரம் அல்லது வீடுபேறு கிடைக்கிறது.

# ஆன்மீக போதனைகள்

— ஸ்ரீ சுவாமி சிவானந்தா

1. அனுதினமும் அதிகாலையில் நான்கு மணிக்கு எழுந்திரு. இக்காலம் ஈஸ்வர தியானத்திற்கு மிகவும் அனுகூலமானது. ஜபம், தியானம் செய்.

2. ஜபம், தியானம் செய்ய கிழக்கு அல்லது வடக்கு நோக்கி பத்மாஸனத்திலேனும், ஸித்தாசனத்திலேனும் உட்காரவும். இந்நேரத்தை முடிந்த அளவு அதிகரித்துக் கொள்ளவும். தேக ஆரோக்கியத்தின் பொருட்டு சில ஆசனங்களை முறையாகவும், ஒழுங்காகவும் செய்.

3. உன் மனதுக்கு இசைந்த ஏதேனும் ஒரு மந்திரத்தை தினந்தோறும் 108 முதற்கொண்டு முடிந்த அளவு ஜபம் செய்.

மந்திரங்கள் : ஓம் நமோ நாராயணாய; ஓம் நமசிவாய; ஓம் நமோ பகவதே வாசுதேவாய; ஓம் சரவணபவாய நம; ஸீதாராம்; ஸ்ரீராம்; ஹரிஓம்; காயத்திரி.

4. சாத்வீக ஆகாரத்தை எடுத்துக்கொள். உணவை உண்ணுமுன் அதை இறைவனுக்கு அர்ப்பணம் செய். அவனுடைய பிரசாதமாக எடுத்துக்கொள்.

5. தியானத்திற்கென தனி அறையைப் பயன் படுத்துங்கள்.

6. உங்கள் வருவாயில் பத்தில் ஒரு பங்கினை தர்மம் செய்யுங்கள்.

7. தினசரி பகவத் கீதையில் ஒரு அத்தியாயம் படியுங்கள்.

8. வெகு ஜாக்கிரதையுடன் வீர்ய சக்தியைக் காப் பாற்றுங்கள். ஏனெனில் வீரியமே ஸர்வ சக்தி. தனியாக படுத்துத் தூங்குங்கள்.

9. சில ஸ்தோத்திரப் பாடல்களையும், ஸ்லோகங் களையும் மனப்பாடம் செய்து கொண்டு ஜபத்திற்கோ, தியானத்திற்கோ ஆசனத்தில் உட்காரும்போது சொல்லவும். அப்படி செய்தால் உன் மனது விரைவில் புனிதமாகும்.

10. தீயோரிணக்கத்தை விலக்கு. சத்சங்கத்தை நாடு. புகைபிடித்தல், போதை தரும் பானம் இவைகளை விட்டுவிடுங்கள்.

11. ஏகாதசி தினம் உபவாசம் இருங்கள். இன்றேல் பால் பழங்களை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள்.

12. ஜபமாலை ஒன்றை கழுத்திலாகிலும், சட்டை பையிலாகிலும் வைத்திருங்கள்.

13. தினம் இரண்டு மணி நேரம் மௌனமாக இரு. சாப்பிடும் பொழுது மௌனத்தைக் கடைப்பிடியுங்கள்.

14. எந்நிலைமையிலும் உண்மையே பேசுங்கள். மித மாகவும் இனிமையாகவும் பேசுங்கள்.

15. தேவைகளை குறைத்துக் கொள்ளுங்கள். திருப்தி யாகவும், சந்தோஷமாகவும் வாழ்க்கையை நடத்துங்கள்.

16. ஒருவருக்கும் தீங்கு செய்யாதீர்கள். மற்றவர் களுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்தாதீர்கள். எல்லோ ரிடமும் அன்பாக இருங்கள்.

17. வேலைக்காரர்களையே நம்பி இருக்காதீர்கள். தன் கையே தனக்கு உதவி என்பது மேலான நற்குணம். சுய தேவைகளை நீங்களே பூர்த்தி செய்துகொள்ளுங்கள்.

18. படுக்கையைவிட்டு எழுந்தவுடனும், படுக்கைக்கு செல்லும் முன்னும் கடவுளைத் தியானியுங்கள். கடந்த தவறுதல்களைப் பற்றி சிந்திக்காதீர்கள்.

19. எளிமையான வாழ்க்கையும், உயர்ந்த எண்ணமும் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருத வேண்டும். சாது, சந்நியாசி, ஏழை எளியோர்களுக்கு உதவி செய்யுங்கள்.

20. 'மரணம் ஒவ்வொரு நொடியிலும் உனக்காக காத்திருக்கிறது' என்பது நினைவிருக்கட்டும். ஆகையால் உன் கடமைகளைச் செய்யத் தவறாதே. ஆன்மீக நாட் குறிப்பு எழுதி வாருங்கள்.

குறிப்பு : ஸாதனங்களின் ஸாரங்கள் இதுதான். இந்த ஆத்மார்த்த போதனைகளை தினசரி படித்து அன்றாட வாழ்க்கையில் அனுஷ்டித்து வாருங்கள்.

